ஜூன் 2005



Rs. 12 /-

# அம்புலிமாமா

ஜீ-மேன்
சாகஸங்களை இந்த இதழில்
படித்து மகிழுங்கள்

G-man

# JUNIOR CHANDAMAMA
## is 25 issues old this month




Here's a special ANNIVERSARY offer!

Pay only Rs. 120 (for 12 issues) and save Rs. 24



Go, grab the discount!

Offer extended to June 30, 2005

on a request from our subscribers.

You can now avail of the concession for a GIFT Subscription

---

## SUBSCRIPTION FOR JUNIOR CHANDAMAMA

☐ Please enrol me as a new subscriber for **Junior Chandamama** in English

☐ I am a subscriber( Subscription No: ....................); I would like to take out a GIFT Subscription.

My name / My friend's name : ..............................................................................

Home address : ..............................................................................

.............................................................................. PIN CODE : ..............................

I am enclosing DD / M.O. Receipt No. ................................ issued by ........................

P. O. for Rs 120.00

*Signature*

**ATTACH THIS LABEL ON THE FIRST COPY**

---

**This is a GIFT copy with love from** ..............................................................................

.............................................. **Town / City** ..............................................



# அம்புலிமாமா

மதிமுகம் : 58 ஜூன் : 2005 புன்னகை : 06



## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக


















SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
**No. 82, Defence Officers Colony**
**Ekkatuthangal,**
**Chennai - 600 097**
**E-mail :**
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900 /- இந்தியாவிற்குள் ரூ.144 /- **புக்போஸ்டில் உங்கள்** சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# இந்தியாவுடன் நட்பு

அமைதி என்ற சொல் கேட்பதற்கு எவ்வளவு அழகாகவும், மகிழ்ச்சியைத் தருவதாகவும் உள்ளது? சண்டை சச்சரவுகளை அறவே விலக்கி, நேசமும், நட்புரிமையும் ஓரிடத்தில் தழைத்தோங்கச் செய்தால், அங்கே அமைதி தானாகவே உண்டாகிறது. முக்கியமாக இரு நாடுகள் நட்புரிமை கொண்டாடும் போது அங்கு அமைதி நிச்சயமாக நிலவும் என்பதில் ஐயமில்லை.

சமீபத்தில் இந்தியாவில் நடந்த நிகழ்ச்சிகள் அத்தகைய அமைதிக்கு அடிகோலும் என்ற நம்பிக்கையை அளிக்கின்றன. இந்தியாவுடன் என்றுமே நண்பர்களாக இருப்போம் என்று சமீபத்தில் இந்தியாவுக்கு விஜயம் செய்த பாகிஸ்தான் அதிபர் திரு முஷரஃப் அவர்களின் வாக்குறுதியும், இரண்டு நாடுகளும் பரஸ்பர போக்குவரத்துக்கான பேருந்துகளைத் தொடக்கியதும் ஒரு முக்கியமான வரலாற்று நிகழ்ச்சியாகும்.

சமீபத்தில் இந்தியாவுக்கு விஜயம் செய்த சீன அதிபரும் இந்தியாவோடு நட்புரிமை பாராட்ட முழுமனதுடன் வந்திருப்பது மற்றொரு முக்கியமான நிகழ்ச்சி. உலகிலுள்ள மற்ற வல்லரசுகளும் இப்போது இந்தியாவுக்கு நேசக்கரம் நீட்டி இணைந்து செயற்பட முன்வருகின்றன.

இந்தியா உலகிலேயே மிகப்பெரிய ஜனநாயக நாடாக இருப்பதும், பொருளாதார முன்னேற்றப் பாதையில் விரைவாக வளர்வதும், அதற்கான முக்கிய காரணங்களில் ஒன்று.

ஆனால் இந்தியாவின் ஜனநாயக முறையையும், அமைதியையும் குலைக்க சில தீய சக்திகள் முயல்கின்றன. இத்தருணத்தில் இளைய சமுதாயம் நாட்டை பாதுகாக்க தங்களது முழு முயற்சியையும் செலுத்த வேண்டும். ஏனெனில் இந்தியாவின் எதிர்காலம் அவர்களிடம் தான் உள்ளது.

ஆசிரியர் : **விஸ்வம்**

**Visit us at : http://www.chandamama.org**







# உண்மை நெருப்பைப் போன்றது

இரவு உணவருந்தியவுடன் வழக்கம் போல் குழந்தைகள் பாட்டியைச் சுற்றி அமர்ந்து கதை சொல்லும்படி வேண்டினர். அப்போது பத்து வயதான ராம் பாட்டியிடம், ''பாட்டி! நேற்று பெரியப்பா தன்னுடைய சிநேகிதரிடம் 'கிருஷ்ணன் பல நாள்களாக எல்லாரையும் ஏமாற்றி வருகிறான். ஆனால் எத்தனை நாட்களுக்கு அது நடக்கும்? என்றாவது ஒருநாள் உண்மை தெரிய வரும். ஏனென்றால் உண்மை நெருப்பைப் போன்றது', என்று சொல்லிக் கொண்டிருந்தார் அதற்கு என்ன அர்த்தம்?'' என்று கேட்டான்.

அவனை அன்போடு அணைத்துக் கொண்ட பாட்டி, ''ஆமாம், குழந்தை! நீ கேட்டது சரிதான்! இதைப் பற்றி இன்று உங்களுக்கு ஒரு கதை சொல்கிறேன், கேளுங்கள்'' என்றாள்.

ஒரு ஊரில் ஒரு ஜமீன்தாரிடம் ஒரு இளைஞன் வந்தான். அவன், ''ஜமீன்தார் ஐயா! என் பெயர் விஸ்வநாதன். நான் படித்தவன். என்னுடைய படிப்பிற்குத் தகுந்த வேலை ஏதாவது தாங்கள் எனக்குக் கொடுத்தீர்களானால், நான் உங்களிடம் நன்றியுடையவனாக இருப்பேன்'' என்றான்.

''என்னிடம் சந்திரன், கண்ணன் என்ற இரு நிர்வாகிகள் எனது ஜமீன் காரியங்களை கவனிக்கின்றனர். நீ அவர்களிடம் உதவியாளனாக ஓரிரு மாதங்கள் வேலை செய். பிறகு உனக்கு வேறு வேலை கொடுக்கிறேன்'' என்றார் ஜமீன்தார்.

அதன்படியே விஸ்வநாதன் அவர்கள் இருவருக்கும் உதவியாளனாகப் பணி புரியத் தொடங்கினான். மிகவும் சிறப்பாகவும் சாமர்த்தியமாகவும் வேலை செய்த விஸ்வநாதனை இருவருக்குமே பிடித்துப் போயிற்று. இருவருக்கும் திருமண வயதில் மகள் இருந்ததால், விஸ்வநாதனை தனது மாப்பிள்ளையாக்க இருவருமே திட்டமிட்டனர். சந்திரன், விஸ்வநாதனிடம், ''கண்ணனை நம்பாதே! அவன் பொய்க்கணக்கு

எழுதி ஜமீன்தாரை ஏமாற்றி வருகிறான். அவனுடைய மகள் உனக்கு வேண்டாம்!'' எ ன்று கூ றினான். கண்ணனும் அதேபோல், ''சந்திரன் தன் மனைவி நோயாளி என்று பொய் சொல்லி ஜமீன்தாரிடம் பணம் கறக்கிறான். அ வனு டைய சம்பந்தம் உனக்கு வே ண்டாம்!'' எ ன்று கூ றி வந்தான்.

இருவரும் மாற்றி மாற்றி ஒருவரை ஒருவர் குறை கூறுவதைக் கண்ட விஸ்வநாதன் அந்த ஊரிலிருந்த தனது தூரத்து உறவினரான பத்மநாபனை அணுகி, இருவரையும் பற்றி விசாரித்தான். அவர் '' இருவருமே சரியான மோசடிப் பேர்வழிகள். கோயில் ராமநவமி உற்சவத்திற்காக ஜமீன்தார் கொடுத்த பணத்தில் பாதியை சந்திரன் களவாடி விட்டான். அதேபோல் சத்திரத்திற்கு அளித்த நன்கொடைப் பணத்தில் பாதியை கண்ணன் எடுத்துக் கொண்டு விட்டான்'' என்றார்.

அதைக் கேட்ட பிறகு விஸ்வநாதன் ஜமீன்தாரை சந்தித்து, தான் அறிந்த விஷயங்களை அவரிடம் கூறினான். அவர்கள் இருவரும் ஜமீன்தாருடைய சொத்தைக் கையாடல் செய்கிறார்கள் என்றும், தே வைப்பட்டால் அ தை நிரூபிக்க அதே ஊரில் உள்ள பத்மநாபன் தயாராக இருப்பதாகவும் கூறினான்.

அதைக் கேட்ட ஜமீன்தார் தி டுக்கிட்டார். பிறகு தன்னை சமாளித்துக் கொண்டு, ''பத்பநாபன் போன்ற நல்லவர்களைப் பற்றி எனக்குத்தெரியும். ஆனால் அவர்களை அழைத்து குற்றங்களை நிரூபிக்க நான் சொல்லப் போவதில்லை. உ ண்மை நெ ருப்பைப் போன்றது. அதை பல நாள்கள் அடக்கி வைத்திருக்க முடியாது. இந்த நிமிடத்திலிருந்து, சந்திரன், கண்ணன் இருவருக்கும் மட்டுமின்றி என்னிடம் வேலை செய்யும் அனைவருக்கும் மேலதிகாரியாக நீ பொறுப்பு ஏற்றுக் கொள்வாய். மேலும் இவ்வாறு தவறுகள் ந டக்காமல் நீ க ண்காணிப்பாயாக!'' என்றார்.

இத்துடன் கதையை முடித்த பாட்டி, ''நாம் எவ்வளவுதான் பிறருக்குத் தெரியாமல் கெட்ட காரியங்களைச் செய்தாலும், என்றாவது அவை வெளியுலகுக்குத் தெரியவரும். இப்போது புரிகிறதா உண்மை ஏன் நெருப்பைப் போன்றது என்று?'' என்று கேட்டாள். ''புரிந்தது பாட்டி'' என்று எல்லாக் குழந்தைகளும் ஒரே குரலில் பதில் அளித்தனர்.



# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (நவம்பர்)

## தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



அவையோர்களின் நியாயமான சந்தேகத்தைப் போக்க மன்னர் விளக்கம் தந்தார்: ''நான் காவல்காரனுக்கும் ஆசிரியருக்கும் கொடுத்த பரிசுகள் வெவ்வேறு. அதுவும் காவல் காரனைக் காட்டிலும், ஆசிரிய ருக்குக் கிடைத்தது சிறப்பான பரிசு. இது ஏன் என்ற உங்கள் சந்தேகம் நியாயமான ஒன்று. பலநாள் திருடனைக் கையும் களவுமாக காவல்காரன் பிடித்தது பாராட்டுக்குரிய செயலே! ஆனால் சற்று கவனித்துப் பார்த்தால் உங்களுக்கே புரியும். காவல்காரன் தன் கடமையைத்தான் செய்துள்ளான். அந்த வேலைக்காக அவனுக்கு சம்பளமும் தரப்படுகிறது. ஆனால் அன்றுபோல் என்றும் தன் கடமையில் கண்ணும் கருத்துமாய் இருப்பதற்காக அவனை ஊக்குவிக்கும் வகையில், ஒரு மோதிரம் அவனுக்குப் பரிசளித்தேன். ஆசிரியரின் வேலை பாடம் கற்பிப்பது மட்டுமே! ஆனால் தெருவில் சென்று கொண்டிருந்த ஒரு சிறுவனின் தங்கச் சங்கிலியை ஒரு போக்கிரி பறிக்க முயற்சிக்கையில், அவர் நமக்கேன் வம்பு என்று பயந்து கொண்டு சும்மாயிராமல், அந்தப் போக்கிரியைப் பிடிப்பதில் உதவி செய்தார். அது ஒரு குடிமகனுக்கு இருக்க வேண்டிய பொறுப்புணர்ச்சியைக் காட்டுகிறது. மேலும் கணநேர சபலத்தினால் உந்தப்பட்டு, இத்தகைய சிறு குற்றங்களை செய்பவர்களை உடனுக்குடன் பிடித்து சிறிய தண்டனைகள் கொடுத்தால், பிற்காலத்தில் அவர்கள் பெரிய திருடன் ஆகாமல் இருப்பார்கள். இது தனது வேலையில்லை என்று கருதாமல், சிறுவன் மீது இரக்கம் கொண்டு, போக்கிரியைப் பிடிக்க உதவி செய்ததற்காக அவருடைய செய்கைக்காகவும் அவரைப் போலவே எல்லாரும் நடந்து கொள்ள வேண்டும் என்று அனைவரையும் ஊக்குவிக்கவும் ஆசிரியருக்கு வைரமாலையைப் பரிசளித்தேன்.''

அரசரின் விளக்கத்தைக் கேட்டதும் அவையோர்களின் சந்தேகம் தீர, அனைவரும் அரசரது செய்கையை மெச்சினர்.

**ஆர். தீபிகா,** (7ஆம் வகுப்பு) த/பெ. எம்.ரவி, எண் 13,
சாரதம்பாள் தெரு , வெங்கடேஷ் நகர், விருகம்பாக்கம்,
சென்னை - 600 092.



# மாமியார் மருமகள் சண்டை

எந்த வேளையில் அனுசுயா கணவன் வீட்டில் காலடி எடுத்து வைத்தாளோ தெரியவில்லை, வந்த நாள் முதல் அவளுக்கும் அவள் மாமியார் பார்வதிக்கும் எப்போதும் சண்டை உண்டாகிக் கொண்டே இருந்தது. அனுசுயா என்றாவது புதுப்புடவை உடுத்தி தலையில் பூச்சூட்டி நன்கு அலங்காரம் செய்து கொண்டு தன் சினேசிதிகளுடன் சிரித்துக் கும்மாளம் அடித்தால், உடனே பார்வதி ''இது என்ன வீடா இல்லை நாடக அரங்கா? குடும்பப் பெண்கள் இப்படியா சீவி சிங்காரம் செய்வாள்!'' என்பாள்.

''நான் எப்படி இருந்தால் உங்களுக்கு என்ன? பேசாமல் வாயை மூடிக் கொண்டு இருங்கள்'' என்று அனுசுயா திமிராக பதில் சொல்வாள்.

இப்படி இருவரும் தினமும் சண்டை பிடிக்க, நடுவில் அனுசுயா கணவன் ஆனந்தன் பாடு திண்டாட்டமாகியது. ஒருநாள் மாலை ஆனந்தன் தான் விவசாயம் செய்யும் வயலுக்கு அருகிலேயே அமர்ந்து தன்னுடைய பிரச்சினையைப் பற்றியும், இதை எப்படி தீர்ப்பது என்பது பற்றியும் சிந்தனை செய்து கொண்டிருந்தான். அப்போது அவனுடைய நண்பர்களான ராமனும், பீமனும் அந்தப் பக்கம் சென்று கொண்டிருந்தனர்.

அவர்கள் கவலையுடனிருந்த ஆனந்தனை நோக்கி என்ன விஷயம் என்று கேட்க ஆனந்தன் தன் வீட்டில் தன் தாயும் மனைவியும் தினமும் சண்டை போட்டுக் கொள்வதைப் பற்றிச் சொல்லி வருந்தினான். பிறகு அவர்களிடம் எங்கு சென்று கொண்டிருக்கிறார்கள் என்று கேட்டான்.

அதற்கு ராமன், ''பக்கத்து கிராமத்தில் ராமநவமியை ஒட்டி நாடகம் நடக்க உள்ளது. அந்த நாடகத்தில் நாங்கள் இருவரும்

-பூர்ணிமா-

வேடம் அணிந்து நடிக்கப் போகி றோம்'' என்றான். பிறகு பீமன் ஆனந்தனை நோக்கி ''ஆனந்தா! உன் தாயும் மனைவியும் அடிக்கடி சண்டை போடுவதை நினைத்து வருத்தப்படாதே. விரைவிலேயே உன் பிரச்சினை தீர்ந்து விடும்'' என்று ஆறுதல் அளித்தான்.

ராமனும் ''ஆமாம் ஆனந்தா! கவலையை விடு. பீமன் சொல்வது போல் உன் பிரச்சினை விரை விலேயே சரியாகிவிடும்'' என்று கூறி இருவரும் விடை பெற்றனர்.

ஒருவாரம் கழிந்தது. அன்று பௌர்ணமி இரவு. வீட்டில் ஆனந்தன், அவன் மனைவி, அவன் தாய் அனைவரும் உறங்கிக் கொண்டி ருந்தனர். திடீரென அவர்கள் வீட்டுக் கொல்லைப்புறத்தில் ஏதேதோ கூக்குரல் கேட்க அதில் அனுசுயாவும் பார்வதியும் விழித்துக் கொண்டனர். இருவரும் விரைந்து பின்புறம் சென்றனர். அங்கு அவர்கள் கண்ட காட்சி அவர்களை திடுக்கிடச் செய்தது.

கிணற்றடியில் அதிசய உருவம் கொண்ட இரண்டு பிசாசுகள் நின்று கொண்டிருந்தன. பிசாசுகளைக் கண்டு கூச்சலிடப் போன பார்வதி யையும் அனுசுயாவையும் நோக்கி அந்தப் பிசாசுகள் ''பயப்படாதீர்கள். உங்களை ஒன்றும் செய்ய மாட்டோம். இதோ பார், எங்கள் கையிலுள்ள மூட்டையை. அதில் நகைகள் உள்ளன. எந்த வீட்டில் மாமியார் மருமகள் சண்டையிடாமல்





ஒற்றுமையாக இருக்கிறார்களோ அவர்களுக்கு இதைப் பரிசாக அளிக்கத் தீர்மானித்து இந்த கிராமத்தில் உள்ள ஒவ்வொரு வீட்டையும் அலசி ஆராய்ந்து வருகிறோம்'' என்றன.

இதைக் கேட்டதும் ஆச்சரிய மடைந்த பார்வதி, ''உங்களுக்கு இந்த நகைகள் எப்படி கிடைத்தன?'' என்று கேட்டாள். அ தற்கு ஒ ரு பி சாசு, ''நாங்கள் காட்டில் உலாவிக் கொண்டிருந்தபோது, சில திருடர்கள் எங்களைக் கண்டு பயந்து இந்த நகை மூட்டையை கீழே போட்டுவிட்டு ஓடி விட்டனர். இதை நாங்கள் வைத்துக் கொண்டு என்ன செய்வது?'' என்றது. உடனே அனுசுயா ''யாராவது ஏழைகளுக்குக் கொடுக்கலாமே? ஏன் மாமியார் மருமகளைத் தேடி அலை கின்றீர்கள்? '' எ ன்று ே கட்டாள். மற்றொரு பிசாசு ''அம்மா, நாங்கள் போன பிறவியில் உங்களைப் போலவே மாமியாரும் மருமகளு மாக இருந்து ஓயாது சண்டை போட்டுக் கொண்டிருந்தோம். எங்கள் வீ ட்டுக்கு மு ன்புறம் ஒ ரு மரத்தடியில் ஒரு சாமியார் எப்போதும் தவம் ெ சய்து ெ காண்டிருந்தார். எங்கள் சண்டையினால் அவரால் தவமியற்ற முடியாமல் போக அவர் கோபங்கொண்டு எங்கள் இருவரையும் பிசாசுகளாகப் போகும் படி சபித்து விட்டார். நாங்கள் அவர் காலில் விழுந்து மன்னிக்குமாறு கெஞ்சினோம். அதனால் அவர், 'எந்த வீட்டில் ஒற்றுமையாக வசிக்கும் மாமியார் மருமகளுக்கு நன்மை செய்கிறீர்ளோ அப்போது உங்கள் சுய உருவம் கிடைக்கும்' என்றார். அதிலிருந்து ஒ ற்றுமையாக உ ள்ள மாமியார் மருமகளைத் தேடி அலைகிறோம்'' என்றது.

உடனே பரபரப்படைந்த அனுசுயா, ''நாங்கள் இருவரும் இனிமேல் சண்டையே போடாமல் இருப்போம். எங்களுக்கு நகை மூட்டையை கொடுத்து விடு'' என்று கெஞ்சினாள்.

''அது தான் நடக்காது'' என்ற ஒரு பிசாசு ''நாங்கள் ஒரு மாதம் கழித்து மீண்டும் இதே போல் பௌர்ணமி அன்று வ ருவோம். இ ந்த ஒ ரு மாதமும் நீங்கள் ஒற்றுமையாக இருக்கிறீர்களா என்று தினமும் உங்களை கண்காணித்து வருவோம். இந்த நகைகளைப் பெற வேண்டும் என்ற பேராசையின் பொருட்டு

அன்றி உ ண்மையாகவே நீ ங்கள் ஒருவருக்கொருவர் அன்புடன் இந்தால் அடுத்த பௌர்ணமி அன்று இது உங்களுக்குக் கிடைக்கும்'' எனக்கூறி பிசாசுகள் வெளியேறின.

அன்று முதல் பார்வதியும் அனுசுயாவும் சண்டை போடுவதை அடியோடு நிறுத்திவிட்டு மிக ஒற்றுமையாகப் பழகத் தொடங்கினர். இவ்வாறு ஒரு மாதம் கழிந்தது. மீண்டும் பௌர்ணமி இரவு வந்தது. அனுசுயாவும், பார்வதியும் பரபரப்பின் உச்சத்தில் இருந்தனர். கண் கொட்டாமல் விழித்துக் கொண்டு அந்தப் பிசாசுகளின் வருகையை எதிர்பார்த்துக் கிணற்றடியில் காத்திருந்தனர். ஆனால் நேரம் சென்று கொண்டேயிருந்ததே தவிர பிசாசுகள் வரவேயில்லை.

ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு பார்வதி ' 'மருமகளே! உண்மையாகவே ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டினால்தான் உ ங்களுக்குப் பரிசு அளிப்போம் என்றன அந்தப் பிசாசுகள். ஆனால் அந்த நகைக ள் கிடைக்குமே என்று பேராசை எனக்கு அடிக்கடி வந்தது உண்டு. அதனால் தான் அவை வரவேயில்லை எனத் தோன்றுகிறது'' என்றாள்.

அதற்கு அனுசுயா ''அம்மா! நானும் அப்படித்தான். அதனால்தான் அந்தப் பிசாசுகள் வரவில்லை என உறுதியாகிறது. அந்த நகைகளை மறந்து விடுவோம். இந்த ஒரு மாதம் நாம் எவ்வளவு ஒற்றுமையாக மகிழ்ச்சியாகக் கழித்தோம்? அது போல் இனி நாம் இப்படியே இருந்து விடலாமே!'' என்றாள்.

''நீ சொல்வதே சரி. நாம் இனி வரும் நாள்களில் ஒற்றுமையாக ஒருவருக்கொருவர் உண்மையான அன்புடன் பழகுவோம்'' என்று பார்வதி கூறினாள். இதையெல்லாம் கேட்ட ஆனந்தன் மகிழ்ச்சிஅடைந்தான். ஆனால் அவர்கள் மூவருக்குமே தெரியாத ஒன்று என்ன தெரியுமா? ஒரு மாதம் முன்பு அவர்கள் வீட்டுக்கு வந்த பிசாசுகள் ஆனந்தனின் வேடமணிந்த நண்பர்கள் ராமனும், பீமனும் என்பதே!





# மாய மந்திரவாதி

## 19

*(மாயக்குரங்கின் மந்திரக்கோலை கண்டு பிடித்துத் தருபவருக்கு, தன் சுவீகார மகளைத் திருமணம் செய்து கொடுத்து, பாதி ராஜ்ஜியமும் தருவதாக மன்னர் ஜிதகேது அறிவித்தார். கோட்டை மதிலில் நின்று கொண்டிருந்த குரங்கின் மீது காட்டுவாசியான வேடன் அம்பு எய்ய குரங்கு அதே அம்பை காளிவர்மன், மந்திரவாதி ஆகியோர் இருந்த திசையை நோக்கி வீசியது. பிறகு...)*

''எனது மந்திரக்கோல் எங்கே?'' என்று குரங்கு கத்தியது மந்திர வாதியின் க ாதுகளில் வி ழுந்தது. ''கேட்டாயா காளிவர்மா! குரங்கு என்னுடைய மந்திரக்கோலை எங்கோ தொலைத்து விட்டது. அல்லது அதை யாரோ திருடி இருக்கிறார்கள்'' என்றான் மந்திரவாதி.

''ஆம், குருவே!'' என்ற காளிவர்மன் தொடர்ந்து, ''இந்தக் குரங்கிடமிருந்து யாரோ மந்திரக் கோலை திருடி விட்டனர் என்று எனக்கும் தோன்றுகிறது. ஆனால் அதை எப்படிக் கண்டு பிடிப்பது? முதலில் நாம் இந்தக் கோட்டைக்குள் நுழைந்தாக வேண்டும். அதுவே மிகக் கடினமான க ாரியம் எ ன்று தோன்றுகிறது'' என்றான்.

அதற்கு மந்திரவாதி, ''இன்றிரவு நாம் கோட்டைக்கு வெளியே கூடாரம் அமைத்து தங்குவோம். கோட்டைக் கதவுகளை எப்படி தகர்ப்பது என்பது பற்றி இன்றிரவு திட்டமிடுவோம்'' என்றான்.



அதற்குள் உக்கிரதண்டன் முன்வந்து, ''இதற்குப் போய் இன்றிரவு திட்டமிடுவானேன்! இப்போதே வேலையை ஆரம்பித்துவிடலாமே! என்னுடைய கதையால் இந்தக் கதவுகளை உடைக்க முடியாமல் போகலாம். ஆனால் கருங்கல்லா லான கோட்டைச் சுவரை அது உடைத்து விடும்,'' என்று கூறி தன் கதையால் கோட்டைச் சுவரை பலமாகத் தாக்க, சுவரிலிருந்து சில கற்கள் உடைந்து விழுந்தன. உடனே கலவரம் அடைந்த ஜிதகேதுவின் வீரர்கள் உக்கிரதண்டன் மீது அம்பு களை சரமாரியாக செலுத்தத் தொடங்கினர். கோட்டைச் சுவரைத் தகர்க்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்த உக்கிரதண்டனை உடனே மந்திரவாதி பிடித்து பின்னே இழுத்தான். தாக்கு தலை பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று கூறிவிட்டு, காளிவர்மனை நோக்கி, ''காளிவர்மா! எனக்கு என்னமோ வேறு யாரோ ஒரு மந்திர வாதி குரங்கிடமிருந்து எனது மந்திரக் கோலைத் திருடி விட்டான் என்று தோன்றுகிறது'' என்றான்.

இவ்வாறு மந்திரவாதி பேசிக் கொண்டிருந்த நேரத்தில் துறவிபோல் வேடமணிந்த இரண்டு இளைஞர்கள் குரங்கின் கையிலிருந்து தவறி விழுந்த மந்திரக்கோலைத் தாங்கள் ஒளித்து வைத்துக் கொண்டு தங்கள் குருவை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். சிறிய துறவியின் பையில் ஒளித் திருந்த மந்திரக்கோலை, வயதில் பெரிய துறவி தன் கையில் எடுத்துக் கொண்டு ''இதை நமது பைரவ குருவிடம் கொடுப்பதற்கு முன்னால், இதனுடைய மகிமையை சோதித்துப் பார்க்கலாமா?'' என்று கேட்க, மற்றொருவனும் சம்மதித் தான். உடனே அவன் மந்திரக்கோலை இப்படியும் அப்படியுமாக ஆட்டி, ''சூ மந்திரகாளி! கஜானாக் கதவைத் திறந்து விடு!'' என்று கூறி மந்திரக் கோலால் தரையில் தொட்டான்.

அப்போது உண்டான பலமான சத்தத்தினால், பைரவ குரு தன் தவம் கலைந்து கண் விழித்தார். ''யாரடா அவன்! இவ்வாறு என் முன்னே தவறாக மந்திரத்தை உச்சரிப்பது?'' என்று தன் கையிலிருந்த தண்டத்தை வானை நோக்கி உயர்த்தினார்.

பைரவ குருவின் கோபக் குரலைக் கேட்ட இரு சீடர்களும் பயந்து போனார்கள். அதற்குள் அவர்கள் பூமியில் மந்திரக்கோலால் தொட்ட

இடத்தில் ஒரு பள்ளம் உண்டாகி, அதிலிருந்து ஒரு நீர் ஊற்று உண்டாகியது. அந்த நீர் குருவின் மீது பட்டு அவரை நனையச் செய்தது. கோபத்துடன் பார்த்த பைரவ குருவின் கண்களில் அவர் சீடர்கள் தென்பட்டனர். இருவரும் பயந்து நடுங்கிக் கொண்டே அவர் காலடியில் விழுந்தனர். பெரிய சீடனின் கையில் இருந்த மந்திரக்கோலைக் கண்டதும், குருவின் கோபம் ஆச்சரியமாக மாறியது. ''இந்த மந்திரக்கோல் ஏது? எப்படிக் கிடைத்தது? '' என்று கேட்டார். ''குருவே! அதைப் பிறகு சொல்கிறோம். இதனுடைய மகிமையைப் பாருங்கள். நாங்கள் கஜானாவைத் திற என்றதும் இந்த மந்திரக்கோல் அதற்குப் பதிலாக இவ்வாறு செய்திருக்கிறது'' என்றனர்.

அந்த மந்திரக்கோலை தன் கையில் வாங்கிக் கொண்ட பைரவ குரு அதை மேலும் கீழுமாகப் பார்த்தார். பிறகு ஆச்சரியத்துடன், ''இது யாரோ மந்திரவாதியுடையது! உங்களுக்கு இது எப்படி கிடைத்தது? '' என்றார். அதற்குப் பெரிய சீடன் அந்த மந்திரக்கோலை மீண்டும் பைரவ குருவிடமிருந்து தன்னுடைய கையில் எடுத்துக் கொண்டான். பிறகு ''குருவே! முதலில் பொங்கிப் பெருகி வரும் இந்த நீர் ஊற்றை நிறுத்த வேண்டும். இது இப்படியே வந்து கொண்டிருந்தால், இன்னும் சில மணி நேரங்களில் இந்த ஊரே மூழ்கி விடும்,'' என்று கூறிவிட்டு, மந்திரக் கோலை உயர்த்தி, ''சூ மந்திரக்காளி!



கஜானாவின் கதவுகளை மூடிவிடு'' என்று கூறி பூமியில் தட்டினான். மீண்டும் ஒரு பெரிய சத்தம் உண்டாக, மந்திரக்கோலால் தட்டிய இடத்தில் ஒரு பெரிய பள்ளம் புதிதாய் உண்டாகியது. பெருகி வந்த நீர் ஊற்று நின்று விட்டது.

ஆச்சரியத்தில் துள்ளிக் குதித்த பைரவ குரு , ''சீடர்களா! இது எப்படிக் கிடைத்தது உங்களுக்கு என்று நான் அறியேன்! ஆனால் இதைக் கொண்டு வந்ததன் மூலம், ஒரு மகத்தான காரியத்தை சாதித்திருக்கிறீர்கள். இப்போது நீரூற்று நின்று விட்டது. ஆனால் கஜானாக் கதவுகள் திறந்து விட்டதுபோல் தோன்றுகிறது. நீங்கள் இந்தப் பள்ளத்தில் இறங்கிச் செல்லுங்கள்! இதன் வழியே சென்றால், உங்களால் அரண்மனைக் கஜானாவை அடைய முடியும் என்று தோன்றுகிறது.



உடனே இதில் இறங்குங்கள்!'' என்று உத்தவிட்டார்.

அப்போது சிறிய சீடன் சந்தேகத்துடன், ' 'குருவே! இ ந்த ம ந்திரக் கோலை எவ்வளவு தூரம் நம்பலாம்? கஜானாவைத் திற என்றதும் அதைச் செய்யாமல் நீர் ஊற்றை உண்டாக்கியது. கஜானாவை மூடு என்றால் கஜானா செல்லும் வழியைக் காட்டுகிறது. இப்படித் தாறுமாறாக வேலை செய்யும் இதை நம்பி பள்ளத்தில் இறங்கலாமா?'' என்றான்.

சிறிய சீடனின் வார்த்தைகள் அந்த மூவரையும் சற்றுத் தயங்கச் செய்தன. மூவரும் சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தனர். பிறகு பெரிய சீடன், ''குருவே! இன்னொரு விஷயம் தெரியுமா? இந்த மந்திரக்கோல் ஒரு குரங்கிடமிருந்து கிடைத்தது. அது இப்போது மன்னரின் பிரதம மந்திரியாகிவிட்டது. இந்த மந்திரக் கோலை மீண்டும் பத்திரமாகக் குரங்கிடம் ஒப்படைப்பவருக்கு பாதி ராஜ்ஜியமும் தந்து, தனது சுவீகார மகளைத் திருமணம் செய்து கொடுப்பதாக மன்னர் அறிவித்து உள்ளார்'' என்றான்.

''ஆகா! பிரமாதம்! இதை ஏன் முன்னமே என்னிடம் சொல்லவில்லை? '' என்று உற்சாகத்துடன் துள்ளிக் குதித்தார் குரு. தொடர்ந்து, ''நல்லதாகப் போயிற்று! பேசாமல் இதை திருப்பிக் கொடுத்து விடலாம். பாதி ராஜ்ஜியத்தை நான் எடுத்துக் கொள்கிறேன். சுவீகார மகளை உங்களில் ஒருவர் திருமணம் செய்து கொள்ளுங்கள்'' என்றார். ஆனால் சற்று நேர யோசனைக்குப் பிறகு, ''அதிருக்கட்டும்! ஜிதகேது மன்னரின் வார்த்தைகளை மு ழுவதும் ந ம்ப முடியுமா?'' என்று கேட்டார்.

அதற்குள் மந்திரக்கோல் தட்டிய இடத்தில் உண்டான பள்ளத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்த சிறிய சீடன் திடீரென பரபரப்புடன் ''குரு! இந்த பள்ளத்தில் ஒரு சுரங்கப் பாதையும், படிகளும் தெரிகின்றன. இதன் வ ழியே சென்றால் க ஜானாவை அடைந்து விடலாம் என்று தோன்றுகிறது,'' என்றான்.

மற்ற இருவரும் ஆர்வத்துடன் சுரங்கப் பாதையை அருகில் வந்து பார்த்தனர். உடனே குரு, ''நான் சொல்வதைக் கேளுங்கள்! முதலில் இந்த சு ரங்கப் ப ாதை வ ழியாகச் சென்று கஜானாவை அடைந்து வேண்டிய பணம், தங்கம் முதலியன

எடுத்துக் கொள்வோம். மந்திரக் கோலைக் கொடுப்பதா, வேண்டாமா என்று பிறகு யோசிக்கலாம்!'' என்று கூறினார். பிறகு மூவரும் பள்ளத்தின் வழியே சுரங்கப் பாதையில் செல்ல ஆரம்பித்தனர். கொஞ்சதூரம் படிகள் வழியே சென்றபின் சுரங்கம் ஒரே இருள் மயமாக இருந்ததுடன், தண்ணீரால் நிரம்பியிருந்தது. முழங்கால் அளவுத் தண்ணீரில் நடந்து கொண்டே மூவரும் கொஞ்ச தூரம் சென்ற பின்னர் தொலைவில் ஒரு பிரகாசமான ஒளி தென்பட்டது. அதைக் கண்டு ஆச்சரியமடைந்த பைரவ குரு, ''சீடர்களே! நாம் காண்பது கஜானாவில் குவிந்துள்ள வைரங்களின் ஒளிதானோ, என்னவோ! அதிருக்கட்டும், இந்த பொக்கிஷத்தைக் காவல் காக்க யாருமே தென்படவில்லையே! ஒருவேளை அசுரர்கள் காவல் காக்கின்றனவோ?'' என்று சந்தேகத்தைக் கிளப்பினார்.

பெரிய சீடன், ''குருவே! அப்படி யாராவது காவலுக்கு இருந்தால் நம்மால் என்ன செய்ய முடியும்?'' என்று கவலையுடன் கேட்டான். அதைக் கேட்டு சிரித்த சிறிய சீடன், கஜானாவுக்குச் செல்லும் வழியையே நமக்கு உருவாக்கிக் கொடுத்த மந்திரக்கோல் நம்மிடம் இருக்கும் போது, நம்மை யாரால் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டான்.

''சரி, சரி பேசாமல் வாருங்கள்!'' என்று பைரவ குரு கூற, மூவரும் முன்னோக்கி நடந்தனர். அந்த சமயம், சுரங்கத்திற்கு மேல், வெளியே



பூமியே அதிரும் சத்தமும், யானைகளின் பிளிறலும் கேட்டன. அதைக் கேட்ட கணமே, மூவரும் பயத்தில் உறைந்து போயினர். பைரவ குரு, ''ஏனப்பா! ஒருவேளை காட்டு யானைகள் வழி தவறி பள்ளத்தில் இறங்கி சுரங்கப் பாதையில் நம் பின்னே வருகின்றனவா? அப்படியானால் நாம் தொலைந்தோம்!'' என்று மீண்டும் சந்தேகத்தை எழுப்பினார்.

''குருவே! எங்களைக் கேட்டால் நாங்கள் என்ன பதில் சொல்வோம்?'' என்றான் பெரிய சீடன். ''நீங்கள் ஏன் வீணாகக் கற்பனை செய்கிறீர்கள், குருவே! காட்டு யானை இந்த சுரங்கத்திற்குள் ஏன் நுழையப் போகிறது? கவலைப்படாமல் வாருங்கள், கஜானாவைச் சென்று பார்ப்போம்'' என்றான் சிறிய சீடன்.

அப்போது மேலிருந்து நிலத்தின்

ஒரு பகுதி சரிந்து சுரங்கத்தின் உள்ளே மண் பொல பொலவென்று கொட்டியது. நடந்தது என்ன வென்றால் சுரங்கத்திற்கு மேலே இருந்த நிலப்பரப்பில் கரடியும், வேடனும் யானைகளில் சவாரி செய்து கொண்டு வந்து, இரவு கூடாரம் அமைக்க இடம் தேடிக் கொண்டிருந்தனர். இப்போது ஒரு யானை கால் இடறிக் கீழே விழ, மேலிருந்த வேடனும் விழுந்ததால் ஏற்பட்ட அமர்க்களம் தான் அது!

பிறகு சுதாரித்துக் கொண்ட வேடனை நோக்கி, ''காளிவர்மரும், மந்திரவாதியும் இந்த இடத்தை ஒருமுறை நன்றாக பார்வையிட்டால் நல்லது. இங்கு கூடாரம் அமைத்துக் கொண்டால் நன்றாக இருக்கும் என்று நினைக்கிறேன்'' என்றது கரடி. ஆனால் வேடனோ இதைக் காதில் சரியாக வாங்காமல் இடறி விழுந்த தன் யானையின் காலையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு உதட்டைப் பிதுக்கி, தலையை பக்கவாட்டில் ஆட்டிக் கொண்டே,

''கரடியாரே! என் யானைக்கு காலில் நன்றாக அடிபட்டு விட்டது என்று தோன்றுகிறது. அது நடக்கவே கஷ்டப்படுகிறது,'' என்றான்.

அப்போது இருவரும் எதிர்பாராத வண்ணம், மரத்தின் மேலிருந்து வில் அம்புகளுடன் ஒரு வேடன் குதித்தான். குதித்தவன் இருவரையும் நோக்கி, ''நல்லவேளை இத்துடன் உன் யானையும் நீயும் பிழைத்தீர்களே என்று மகிழ்ந்திடுங்கள். இன்னும் கொஞ்ச தூரம் தள்ளிச் சென்று அந்தப் பள்ளத்தில் விழுந்திருந்தால், நீயும் யானையும் சுரங்கத்தில் சமாதியாகி இருப்பீர்கள். ஏற்கெனவே அந்த சுரங்கம் மூன்று போலி பரவ சாமியார்களை விழுங்கி விட்டது,'' என்றான்.

உடனே அவன் முன் கோடாலியுடன் எகிறிக் குதித்த கரடி, ''அடே! நீ யார்? நீ அந்த மாயக்குரங்கின் சீடனா? சொல், உன்னை இப்போதே தொலைத்து விடுகிறேன்'' என்று கோடாலியைப் பயங்கரமாக ஆட்டியது. (தொடரும்)





நவீன வேதாளக் கதை

# அபஸ்வர பிரம்மா

**த**ன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்திலேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி, அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கி செல்லுகையில், அதனுள் இருந்த வேதாளம் சிரித்துக் கொண்டே, ‘‘உன் லட்சியத்தை நிறைவேற்றுவதில் பிடிவாதமாக இருக்கிறாய். உன்னைப் போலவே வறட்டு லட்சியங்களை வாழ்நாள் முழுதும் கடைப்பிடித்து, இறுதியில் அவற்றைக் கைவிட்ட இசை மேதை சிவசாஸ்திரியின் கதை என் ஞாபகத்திற்கு வருகிறது. அந்தக் கதையை உனக்கு சொல்கிறேன், கேள்!’’ என்றது.



சிவசாஸ்திரி என்ற பாடகர் சங்கீதத்தில் கரை கண்டவர். மிகப் பெரிய மேதையான அவரை ஸ்வர பிரம்மா என்று அனைவரும் மிகுந்த மரியாதையுடன் அழைத்து வந்தனர். அவரிடம் சங்கீதம் கற்றுக் கொள்ள பலர் போட்டி போட்டனர். ஆனால் சாஸ்திரி அவ்வளவு எளிதாக யாரையும் தன் சீடனாக ஆக்கிக் கொள்ளமாட்டார். தன்னிடம் சீடனாக சேர விரும்புவர்களுக்கு ஆண்டுக்கு ஒருமுறை வினாயகர் சதுர்த்தி தினத்தன்று ஒரு பரீட்சை வைப்பார். அதில் ஒரே ஒருவனை மட்டும் தன் சீடனாக தேர்வு செய்வார்.

ஒரு வினாயக சதுர்த்தி தினத்தன்று முகுந்தன் கோவிந்தன் ஆகிய இருவரையும் தேர்வு செய்தார். இருவருக்குமே சங்கீத ஞானம், குரல் வளம் இரண்டும் சரிசமமாக இருந்ததால், உடனடியாக ஒருவனைத் தேர்வு செய்ய சாஸ்திரியால் முடியவில்லை. ஆகவே அவர் இருவரிடமும், ''இரண்டு நாள்கள் கழித்து வாருங்கள்'' என்று அனுப்பி வைத்தார்.

இறுதிப்போட்டியில் நன்றாகப் பாடுவதற்கு உயர, கோவிந்தன் அரும் பாடு பட்டு தினமும் மணிக்கணக்கில் சாதகம் செய்தான். ஆனால் முகுந்தன் சாஸ்திரியின் மனைவியை சந்தித்து, ''தாயே, சங்கீதம் கற்பதுடன் பார்வதி-பரமேஸ்வரன் போல் இருக்கும் உங்கள் இருவருக்கும் பணிவிடை செய்ய ஆசைப்படுகிறேன். ஆகவே போட்டியில் நான் வெற்றிபெற உங்களுக்குத் தெரிந்த யோசனை ஏதாவது சொல்லுங்கள்'' என்றான்.

சாஸ்திரியின் மனைவி அவன் மீது இரக்கம் கொண்டு, ''சங்கீதத்திற்கு இனிமையான குரல்வளம் வேண்டும் என்பது உனக்கு நன்றாகத் தெரியும். இந்த ஊரில் சகாதேவன் என்ற மருத்துவர் இருக்கிறார் அவரிடம் குரலை இனிமையாக்குவதற்கான மருந்து உள்ளது'' என்றாள்.

உடனே முகுந்தன் மருத்துவரை நாடிச் சென்று தன் விருப்பத்தைத் தெரிவித்தான். சகாதேவன் சற்று நேரம் யோசித்து விட்டு, ''என்னிடம் அந்த மருந்து உள்ளது. அதை அருந்தி குரலை பாடுவதற்கேற்ப இனிமையாக மாற்றிக் கொள்ளலாம். ஆனால் அளவிற்கு அதிகமாக அருந்தினால் குரல் கெட்டு விடும்'' என்று முகுந்தனை எச்சரித்தவாறு கூறினான்.



''குரலை இனிமையாக்குவது மிக எளிதான வேலை. சரி, இந்த மருந்தின் விலை என்னவென்று கூறுங்கள்?'' என்று முகுந்தன் கேட்டான்.

சகாதேவன் சிரித்தவாறு, ''என்னிடம் பலர் இந்த மருந்தை வாங்கி அருந்தி தங்களுடைய குரலை கெடுத்துக் கொண்டுள்ளனர். நீ உன் குரலை சாதகம் செய்து இனிமை யாக்கினால் நல்லது'' என்றான்.

முகுந்தன் அவனது அறிவுரையைக் கேட்காமல் கேட்ட பணத்தைக் கொடுத்து விட்டு மருந்து வாங்கிச் சென்றான். அவன் சிறிதளவு மருந்து அருந்தியதும் முன்பை விட அவனது குரல் இனிமையாகி விட்டது. இதனால் மகிழ்ந்து போய் மேலும் சிறிது மருந்து அருந்தியதால் அவன் குரல் கெட்டு விட்டது.

போட்டி ஆரம்பமாகியது. முதலில் சாஸ்திரி முன் கோவிந்தன் பாடினான். அதன்பிறகு முகுந்தன் பாடத் தொடங்கினான். முகுந்தனுடைய இனிமையான குரலில் சாஸ்திரியே மயங்கி பாராட்டினார். உற்சாகமடைந்த முகுந்தன் ஆலாபனையைத் தொடர்ந்து சரணத்தை பாடினான் அப்பொழுது அவனிடமிருந்து அபஸ்வரம் வெளிவர ஆரம்பித்தது. சிவசாஸ்திரி அவன் பாடுவதை நிறுத்தச் சொன்னார். தொடர்ந்து, ''உன்னுடைய குரலை இனிமையாக்குவதற்கு நீ சகாதேவனிடம் மருந்தை வாங்கி அருந்தி இருக்கிறாய். உன் பாடல் கேட்கும் படியாக இல்லை. நீ சங்கீதத்தை மறந்து விட்டு வீட்டுக்கு திரும்பிப் போய்விடு'' என்றார்.

''குருவே, என்னை மன்னித்து விடுங்கள். சங்கீத வித்வான் ஆக வேறு ஏதேனும் வழியை நீங்களே கூறுங்கள்'' என்று சிவசாஸ்திரியின் கால்களில் விழுந்தான்.

சிவசாஸ்திரி அவனை தூக்கியபடி, ''தொடர்ந்து பாடிக் கொண்டே இருந்தால் குரல் இனிமையாகிவிடும் என்று கூறுவார்கள். நீயும் அவ்வாறு செய். இதனால் உனக்குப் பலன் கிடைத்தாலும் கிடைக்கலாம்'' என்று அனுப்பி வைத்தார்.

முகுந்தன் ஏமாற்றத்துடன் கிராமத்திற்குத் திரும்பினான். அங்கு வந்ததும் தினமும் உச்ச ஸ்துதியில் பாடி சாதகம் செய்து வரலானான். கிராமத்தினர் அவன் குரலைக் கேட்க முடியாமல் எதிர்ப்புத் தெரிவித்தனர்.



அதனால் அ வன் ஒ ரு க ாட்டிற்குச் சென்று விட்டான். அங்கு ஒரு மரத்தடியில் அமர்ந்து சாதகம் செய்யத் தொடங்கி விட்டான். சிறிது நேரத்தில் அவனுடைய குரலை அவனாலேயே கேட்க முடிய வில்லை. அதனால் பாடுவதை நிறுத்திவிட்டு பெருமூச்சு ஒன்றை விட்டான்.

அடுத்த நிமிடம், ''பாடுவதை ஏன் நிறுத்தி விட்டாய்? மேலே பாடு'' என்று ஒரு குரல் கேட்டது. அந்தக் குரலைக் கேட்டதும் முகுந்தன் ஆச்சரியத்துடன், ''யார் பேசினது? என் முன் வரவும்'' என்றான்.

அப்போது அந்த மரத்திலிருந்து ஒரு பிசாசு கீழே குதித்து அவன் முன் வந்தது. அதைப் பார்த்ததும் முகுந்தன் பயத்தில் நடுங்க ஆரம்பித்தான்.

இதைப் பார்த்ததும் பிசாசு, '' பயப் படாதே! இந்த மரத்தில் என்னுடன் இன்னும் மூன்று குட்டி பிசாசுகள் இருக்கின்றன. அவர்களில் நான்தான் பெரியவன். எங்களிடம் அற்புத சக்தி உள்ளது. நீ தொடர்ந்து பாடினால் நாங்கள் உன் பாடலைத் தொடர்ந்து கேட்போம்'' என்றது.

முகுந்தன் தைரியத்துடன், ''உங்களுக்குப் பாட்டு என்றால் என்னவென்று தெரியுமா'' என்று கேட்டான்.

உடனே பெரிய பிசாசு, ''ஒரு காலத்தில் நாங்கள் மனித உருவில் நகரத்தைச் சுற்றி வருவோம். சங்கீத சபாவில் அபஸ்வரத்தைக் கேட்பது எங்களைப் பொருத்தவரை சாதாரண விஷயம். உன்னுடைய பாட்டைக் கேட்பது எங்களுக்கு மிகவும் பிடித் திருக்கிறது'' என்றது.

அப்பொழுதிருந்து முகுந்தன் அந்த நான்கு பிசாசுகளின் மத்தியில் சாதகம் செய்து வரலானான். அ வன் குரலில் இருந்து வெளிவரும் அ பஸ்வரம் பிசாசுகளுக்கு மிகவும் பிடித்திருந்தது. மனிதர்கள் மத்தியில் சென்று சிவசாஸ்திரியை எதிர்த்து தன் சங்கீதத்தை பிசாரம் செய்வேன் என்று முகுந்தன் முடிவெடுத்தான்.

பிசாசுகளும் அதற்கு சம்மதித்து விட்டன. கிளம்புவதற்கு முன் முகுந்தன் பிசாசுகளிடம் ''மனிதர் களின் எண்ணங்களில் மாற்றம் ஏற்பட வைப்பதற்கு வலுக்கட்டாய மாக நம் சங்கீதத்தை அவர்களிடம் பாடிக் காட்ட வேண்டும். அற்புதங்

களை காண்பிக்க வேண்டும். இதற்கு ஒரு பெரிய தொகை தேவைப்படும்'' என்று கூறினான்.

இதற்கு பெரிய பிசாசு, ''பணத்தைப் பற்றிக் கவலைப்படாதே. அதே போல் எவ்விதமான அற்புதப் பொருட்கள் உனக்கு வேண்டும் என்பதையும் சொல். நாங்கள் கொடுக்கிறோம்'' என்றது.

பிசாசுகள் கூறியதைக் கேட்டதும் முகுந்தன் மிகவும் மகிழ்ந்து போனான். பிசாசுகளையும் மனித உருவில் தன்னுடன் அழைத்துக் கொண்டு, அருகிலிருந்த நகரத்திற்குச் சென்றான். அங்கிருந்த பாஸ்கரன் என்ற பிரமுகரிடம், ''பிரம்மா படைத்தவற்றில் எதுவுமே மோச மானவை கிடையாது. இசையும் அப்படித்தான்! ஸ்வரத்துடன் பாடுவது ஒரு அழகு என்றால், அபஸ்வரமாகப் பாடுவதும் ஒரு அழகு தான்! அபஸ்வர சங்கீதத்தில் நான் ஒரு மேதை! சிவசாஸ்திரி ஸ்வர பிரம்மா என்றால், நான் அபஸ்வர பிரம்மா! ஆனால் மக்களை என் புது முயற்சியில் கவரும்படிச் செய்ய, நீங்கள் பெரிய அளவில் விளம்பரம் செய்ய வேண்டும்!'' என்றுகூறி பிசாசுகளின் உதவியுடன் ஏராளமாகப் பணம் தந்தான். அதைப் பெற்றுக் கொண்ட பிரமுகரான பாஸ்கரன் செய்த விளம்பரத்தால், பொதுமக்கள் முகுந்தனுடைய அபஸ்வர இசை நிகழ்ச்சிக்குத் திரளாகக் கூடினர். முகுந்தன் பாடும்போது பிசாசுகள் அரங்கத்தில் ஏராளமான மாயாஜாலத்



தோற்றங்களை உருவாக்கின. இந்தப் புது முயற்சி மக்களைக் கவர்ந்தது. சில ஆண்டுகளில், முகுந்தனுடைய அபஸ்வர இசை மிகப் பிரபலமாகி நாட்டின் மன்னன் அவனது சங்கீதத் தால் ஈர்க்கப்பட்டு அவனுக்கு அபஸ்வர பிரம்மா என்ற பட்டத்தைக் கொடுத்து கௌரவித்தார்.

ஒருநாள் சிவசாஸ்திரியின் சீடனா யிருந்த கோவிந்தன் முகுந்தனை சந்தித்து, ''முகுந்தா! குரு உனக்கு சங்கீதம் கற்றுக் கொடுக்க சம்மதம் தெரிவித்து உள்ளார்'' என்றான்.

''ஆகா! இத்தனை நாள்கள் கழித்து குருவுக்கு என்னை சீடனாக ஏற்க மனம் வந்ததே என் பாக்கியம்!'' என்று கூறி கோவிந்தனுடன் கிளம்பத் தயாராகி விட்டான். பிசாசுகள் எவ்வளவு எடுத்துக் கூறியும்

முகுந்தன் முறையாக சங்கீதம் பயில தன் குருவை நோக்கி கிளம்பி விட்டான்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம், ''மன்னா! முகுந்தனுடைய போக்கு அதிசயமாக உள்ளது. தன்னுடைய அபஸ்வரமான சங்கீதத்தைக் கொண்டு பெயரும், பொருளும் சம்பாதித்த பிறகு, ஏன் அதையெல்லாம் விட்டுவிட்டு குருவிடம் செல்லத் தீர்மானித்தான்? சிவசாஸ்திரி ஒரு காலத்தில் முகுந்தனை சீடனாக ஏற்றுக் கொள்ள மறுத்தவர், பிறகு அவனை ஆள் விட்டு அழைப்பானேன்? முகுந்தன் அடைந்த புகழைக் கண்டு பொறுக்காமல் அவருக்கு ஏற்பட்ட பொறாமை தான் இதற்குக் காரணமா? இந்தக் கேள்விக்கு விடை தெரிந்தும் நீ மௌனமாக இருந்தால், உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

உடனே விக்கிரமன், ''சங்கீதம் கற்பதில் மிகவும் ஆர்வமாக இருந்த முகுந்தன் முதல் முயற்சியில் தோற்று விட்டான். ஆனால் பிசாசுகளின் வலையில் விழுந்து அபஸ்வர பிரம்மாவாகி விட்டான். இது போன்ற மனிதனுக்கு நல்ல சங்கீதம் கற்பதற்கான வாய்ப்பு கிடைத்தால் கண்டிப்பாக நழுவ விடமாட்டான். இந்தக் காரணத்தினால் தான் அவன் சிவசாஸ்திரியிடம் சென்றான். பிசாசுகள் அவனை எச்சரித்தும் அவன் அதைப் பொருட்படுத்தவில்லை ஏனென்றால் இனி அவனது அபஸ்வரம் வெளியாகி நல்ல ஸ்வரம் வந்து விடும் என்று அவனுக்குத் தெரியும். அதேபோல் சிவசாஸ்திரி முகுந்தனை அழைத்தது, அவன் தன் அபஸ்வரத்தைக் கொண்டு சாஸ்திரிய சங்கீதத்தைக் கெடுத்துக் கொண்டிருக்கிறான் என்பதால் தான். பொறாமையில்தான் சிவசாஸ்திரி இதை செய்தார் என்பது மிகவும் தவறான விஷயம்,'' என்றான்.

விக்கிரமனின் இந்த சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலுடன் இருந்த வேதாளம் மீண்டும் பறந்து சென்று முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.






# குதிரை மூலமாக கடிதப் போக்குவரத்து



பதின்மூன்றாம் நூற்றாண்டில், இந்திய அஞ்சல் துறையின் ஆரம்ப காலக்கட்டத்தில் கடிதங்கள் குதிரை வீரர்கள் மூலம் அல்லது கால் நடையாக அனுப்பப்பட்டு வந்தது. முதல் குதிரை வீரன் நான்கு மைல் தொலைவிற்கு குதிரையை ஓட்டிச் சென்று அங்கு அடுத்த பயணத்தைத் தொடங்க தயாராக உள்ள மற்றொரு வீரனிடம் கடிதங்களை கொடுத்து விட்டு வந்து விடுவான். கால் நடையாக செல்பவர்கள் மூன்று மைல் தொலைவு நடக்க வேண்டி இருக்கும். அவ்வாறு செல்லும் போது கையில் மணிகள் கட்டித் தொங்க விடப்பட்ட ஒரு மரக்கட்டையை ஏந்திச் செல்வர். இதிலிருந்து வரும் ஒலி திருடர்களையும், மிருகங்களையும் எச்சரிக்கை செய்வது போல் இருக்கும்.

# 'அஹோம்'லிருந்து அஸ்ஸாம்

இந்தியாவிற்கு, மயன்மாருக்கும் (பர்மா) இடையே 'போங்' என்ற ஓர் இடத்தில் 'அஹோம்' என்ற பழங்குடியினத்தினர் வசித்து வந்தனர். 13ஆம் நூற்றாண்டில் அவர்கள் 'பாட்கை' மலைகள் வழியே இந்தியாவிற்குள் நுழைந்து, பிரம்மபுத்திரா நதிக்கரையில் குடியேறினர். அப்போது அந்த இடத்திற்கு காமரூபம் என்று பெயர். அவர்கள் இந்து மதக் கோட்பாடுகளைக் கடைப்பிடித்து, பல கோயில்களைக் கட்டினர். அவர்களின் தலைநகரம் சிப்சாகராக இருந்தது. அவர்கள் தங்கியிருந்த இடம் ஷாம், பர்ம மொழியில் அஷாம் அல்லது அஹோம் என்று உச்சரிப்பர். அதுவே பின்னர் அஸ்ஸாம் ஆகி விட்டது.



# சொன்ன வாக்கு பலித்தது!

கிரேக்க நாட்டில் அங்கேயஸ் என்ற பிரமுகர் கப்பல் தலைவனாக பல ஆண்டுகள் பணிபுரிந்து ஏராளமான செல்வம் திரட்டிய பின்னர், அப்பணியிலிருந்து ஓய்வு பெற்றார். எஞ்சிய தன் வாழ்நாட்களை மிகவும் சொகுசாகக் கழிக்க விரும்பிய அங்கேயஸ் ஒரு குன்றின் உச்சியில் தனக்காக ஒரு மாளிகையை உருவாக்கினார். தன்னுடைய திரண்ட செல்வத்தால் உருவாக்கிய அந்த மாளிகையைச் சுற்றி அழகான பெரிய தோட்டம் ஒன்று உருவாக்கி, பலவித பழ மரங்கள் நட்டு, வாழ்க்கையை தன் மாளிகையில் சுகமாகக் கழித்து வந்தார். செல்வந்தரான ஒருவரைச் சுற்றி ஏராளமான நண்பர்கள் வளைய வருவதுண்டு. அதுபோல் அங்கேயஸைச் சுற்றிலும் எப்போதும் அவர் நண்பர்கள் சூழ்ந்திருந்து, அவரைக் களியாட்டங்களில் ஈடுபடுத்தினர். அங்கேயஸும் தன் நண்பர்களுடன் விருந்து, இசை, நடனம் என்று பொழுது போக்கி வந்தார். ஒரு முறை அவருடைய ஆசிரியர் அவரிடம் ''கடவுள் உனக்குக் கொடுத்த செல்வத்தை உலகில் மற்றவர்களுக்கு நல்ல வழியில் பயன்படுமாறு செலவழிப்பாய்'' என்று சொன்ன அறிவுரை மட்டும் அவருடைய செவிகளில் ஏறவில்லை.



பழங்காலத்தில் மன்னர்களுக்கிடையே அடிக்கடி போர் நிகழ்வது உண்டு. இரு மன்னர்களுக்கிடையே நடக்கும் போரில் வெற்றி பெற்ற மன்னர், தோல்வியுற்றவரின் நாட்டிலிருந்து குடிமக்களை கைதிகளாக்கி தமது நாட்டுக்குக் கொண்டு வந்து அவர்களை அடிமைகளாகப் பயன்படுத்தினர். இத்தகைய அடிமைகளை செல்வந்தர்கள் விலைக்கு வாங்கித் தங்களுடைய வேலைகளுக்குப் பயன்படுத்துவதுண்டு. அத்தகையோர் தங்களிடம் பணி புரியும் அடிமைகளை சக்கையாக பி ழிந்து வேலை வ ாங்குவதுண்டு. அத்தகைய அடிமை களின் வயதையோ, உடல் நலத்தையோ பொருட்படுத்தாமல் அவர்களை ஈவு இரக்கமின்றி வேலை செய்ய வைப்பதுண்டு.



அங்கேயஸூம் அதுபோல் ஏராளமான அடிமைகளை விலைக்கு வாங்கித் தன் பணியாட்களாக நியமித் திருந்தார். ஒருமுறை அவருக்குத் தன்னிட மிருந்த மலைப்பாங்கான நிலத்தை உழுது திராட்சைகள் பயிரிட்டு, அதிலிருந்து மது தயாரித்து அருந்த ஆசை உண்டாயிற்று. அ ந்தப் ப ணியில் ஏராளமான அ டிமைகள் ஈ டுபடுத்தப் பட்டனர். அந்த அடிமைகள் இரவு பகலாக க டும்பாடுபட்டு நி லத்தை உழுது சீர் செய்ய வேண்டியிருந்தது. அவர்களுடைய வே லையை மே மற் பார்வை செய்யும் அதிகாரி தயை தாட்சண்யமின்றி அவர்களை சாட்டை யால் அடித்து வேலை செய்யச் செய்தான். ஒருமுறை அங்கேயஸ் அந்த இடத்திற்கு வந்திருந்தார். எஜமானர் வந்து நிற்கும் போது தன் மேற்பார்வை இடும் திறமையை காட்ட, அந்த அதிகாரி அவர்களை அடித்து ''ஒழுங்காக வேலை செய்யுங்கள் முட்டாள்களே! இந்த இடத்தில் பயிராகும் திராட்சை களில்இருந்து தயாரிக்கப்படும் மதுவை அருந்த நமது எஜமானர் மிக ஆவலாக இருக்கிறார்!'' என்று விரட்டியடித்து வேலை வாங்கினான்.

''ஆமாம்!'' என்று ஆமோதித்த அங்கேயஸ், ''மிகச் சிறந்த சாதியைச் சேர்ந்த திராட்சைகளை இங்கே பயிரிடப் போகிறேன். என்னுடைய தோட்டத்தில் விளைந்த திராட்சை களிலிருந்து தயாரித்த மதுவை ருசிக்க ஆவலாக இருக்கிறேன்!'' என்றார்.

திடீரென அந்த அடி மைகளில் ஒருவன், ''இங்கு விளையும் திராட்சை களின் மதுவை அருந்தும் பாக்கியம் நம் எஜமானருக்குக் கிடைக்காது'' என்றான். உடனே அவன் மீது பாய்ந்து, அதிகாரி அவனை கண்மண் தெரியாமல் அடித்தான். ஆனால் மீண்டும் அந்த அடிமை தைரியமாக, ''தனது சொந்த நிலத்திலிருந்து உண்டாகும் திராட்சை களின் மதுவை அருந்தும் பாக்கியம் அவருக்குக் கிட்டாது'' என்றான். அங்கேயஸ் அவனைக் கொன்றே விடுவார் என்று அனைவரும் எதிர் பார்த்தபோது, அவர் அவனை விட்டு விடச் சொல்லிவிட்டு, மௌனமாகத் திரும்பிச் சென்று விட்டார்.

சில மாதங்களில், திராட்சைக் கொடிகள் பிரமாதமாக வளர்ந்து, திராட்சைக் குலைகள் ஏராளமாகத் தோன்றின. அவற்றில்இருந்து கை



தேர்ந்த நிபுணர்களால் மிகச் சுவையான மதுவும் தயாரிக்கப் பட்டது. தன் தோட்டத்தில் விளைந்த திராட்சைகளிலிருந்து தயாரிக்கப்பட்ட மதுவை, அங்கேயஸ் அருந்தும் நாளும் வந்தது. உற்சாகமாக அமர்ந்திருந்த அங்கேயஸ் தன் முன் வைக்கப்பட்டிருந்த மதுக் கிண்ணத்தைப் பார்த்து மிக மகிழ்ச்சி அடைந்தான். அன்று தன்னைப் பார்த்து அபசகுணமாகப் பேசிய அடிமையை தன் முன்னே அழைத்து வரச் செய்தான். அவன் வந்தவுடன் அவனை நோக்கி மிகுந்த கர்வத்துடன், ''இந்த மதுவை அருந்தும் பாக்கியம் எனக்குக் கிடைக்காது என்று சொன்னாயே! இதோ பார், உன் கண்ணெதிரிலேயே எனது தோட்டத்து திராட்சையில் தயாரித்த மதுவை அருந்தப் போகிறேன்!'' என்று கர்வத்துடன் கூறினான்.

அந்த அடிமை நிதானமாக, ''எஜமானரே! கோப்பையில் இருக்கும் மது தங்கள் வாயை அடைவதற்குள் கூட ஏதாவது தடங்கல் ஏற்படலாம்!'' என்றான். அதைக் கேட்டு அட்ட காசமாகச் சிரித்த அங்கேயஸ், கோப்பையை தன் உதடுகள் வரை எடுத்துச் சென்று விட்டான்.

அப்போது திடீரென பரபரப்புடன் நுழைந்த ஒரு பணியாள், ''எஜமானரே! நமது திராட்சைத் தோட்டத்தை ஒரு காட்டுப்பன்றி நாசம் செய்து கொண்டிருக்கிறது'' என்று அறிவித்தான். உடனே அங்கேயஸ் உருவிய வாளுடன் திராட்சைத் தோட்டத்திற்கு விரைந்து ஓடினார். ஆனால் சென்றவர் திரும்பி வரவில்லை. ஆம், அவரை அந்த காட்டுப்பன்றி மூர்க்கமாகத் தாக்கிக் கொன்று விட்டது. மேஜையில் வைக்கப்பட்ட மது சுவைக்கப்படாமல் அப்படியே இருந்தது.

இன்றும் ஆங்கிலத்தில், ''தேர் இஸ் மெனி எ ஸ்லிப் பிட்வின் தெ கப் அண்ட் தெ லிப்'' என்ற பழமொழியை உபயோகப் படுத்துகிறோம். அதாவது எந்த நேரமும் எதுவும் நடக்கலாம் என்றும், ஒருவனுடைய திட்டங்கள் கடைசி நொடியில் எதிர்பாராமல் தடைப்படலாம் என்றுமே அந்தப் பழமொழியின் பொருளாகும்.

# சாஸ்திர ஞானமும், பொது அறிவும்!

**ரா**மாபுரத்தில் ரங்கநாதன் என்ற ஆயுர்வேத மருத்துவர் வசித்து வந்தார். ஆயுர்வேதத்தில் அவர் தலைசிறந்தவர். தன்னிடம் வரும் ஒரு நோயாளியைக் கண்டவுடனேயே, அவனுக்கு என்ன நோய் அவற்றின் காரணங்கள் என்ன என்பது பற்றி விளக்கமாகக் கூறிவிடும் அளவிற்கு, வைத்திய சாஸ்திர ஞானம் படைத்தவர். ஆனால் தனது தொழிலில் பெரிய மேதையாக இருந்தும், அவரை நாடிவரும் நோயாளிகளின் எண்ணிக்கை குறைவாகத்தான் இருந்தது.

ஒருமுறை அவருடைய குருவான தாத்தாச்சாரியார் அவரை சந்திக்க வந்திருந்தார். தன்னுடைய குருவுடன் அவர் உரையாடிக் கொண்டிருந்த போது, அவரை ஒரு பெண்மணி சந்திக்க வந்தார். அந்தப் பெண்மணி ரங்கநாதனிடம் ''மருத்துவரே! எனக்கு வயது இருபதுதான் ஆகிறது. ஆனால் இந்த சிறிய வயதிலேயே சிக்கலான ஒரு நோய் என்னை வாட்டுகிறது. அது என்ன என்று கண்டறிந்து அதற்கு மருந்து தாருங்கள்'' என்று சொன்னாள். மேலும் பேசுவதற்கிருந்த அவளை இடையிலேயே நிறுத்தி ''என்ன சொன்னாய்? உனக்கு வயது இருபதா? இருக்கவே இருக்காது! உனக்கு வயது முப்பத்தைந்தாவது இருக்கும்!'' என்றார் ரங்கநாதன். அதைக் கேட்டதும் எழுந்து போய் விட்டாள்.

ரங்கநாதன் தன் குருவிடம், ''பார்த்தீர்களா! இவள் கோபப்படும்படி நான் என்ன சொல்லி விட்டேன்? இவள் ஏன் பாதியிலேயே போய் விட்டாள்? இதுபோல் தான் என்னிடம் வரும் நோயாளிகள் நான் ஏதாவது சொல்லத் தொடங்கினால், பாதியிலேயே எழுந்து போய் விடுகின்றனர்'' என்றார்.

''எனக்குப் புரிகிறது!'' என்ற அவருடைய குரு தொடர்ந்து,'' உனக்கு ஆயுர்வேத சாஸ்திர ஞானம் பரிபூரணமாக இருந்தாலும், பொது அறிவு இல்லை. நோயாளிகளிடம் அவர்களுடைய மனது நோகாமல் பேசும் பக்குவம் உனக்கு இன்னும் ஏற்படவில்லை'' என்றார்.

– ராம் சங்கர்.



# செய்திச்சுடர்

## பெண்களுக்கான ஒரு மசூதி

இஸ்லாமியர்கள் ஒருநாளுக்கு ஐந்து முறை மசூதிக்குச் சென்று தொழ வேண்டும். பெண்மணிகள் மசூதிக்குச் செல்லாமல் வீட்டிலேயே தொழுவார்கள். இஸ்லாமிய பெண்கள் மசூதிக்குச் செல்லலாமா என்று சர்ச்சை நடந்து கொண்டிருக்கையில் த மிழ் ந ாட்டில் புதுக்கோட்டை மாவட்டத்தில் இஸ்லாமியப் பெண்களுக்காகவே ஒரு ம சூதி உ ருவாக்கப்பட உள்ளது. பாரம்பூரில் தோன்றவிருக்கும் அந்த மசூதிக்கு அருகில் பெண்களுக்காக ஒரு பள்ளிக் கூடமும் உருவாகப் போகிறது. சாயா பெண்கள் கழகம் இந்த ஏற்பாடுகளை செய்யவிருக்கிறது.





## கண்களிலிருந்து கற்கள்

நேபாள நாட்டில் ஜனக்பூர் மாவட்டத்திலுள்ள ஆனந்த் நகர் எனும் ஊரிலுள்ள பதினோரு வயதான மந்தீப் போக்ரல் என்ற சிறுவனுக்கு மந்திரமும் தெரியாது, மாயமும் தெரியாது. ஆனால் அவன் கண்ணீர் வடித்தால், கண்ணீருடன் அரிசியின் அளவுள்ள சிறிய கற்களும் விழுகின்றனவாம். எவ்விதமான மருந்துகளாலும் குணப்படுத்த முடியாத இந்த நோயைக் கண்டு, மருத்துவர்கள் திகைத்துப் போயிருக்கிறார்கள். சிறுவனுடைய பெற்றோர் இப்போது அலோபதியை விடுத்து, ஆயுர்வேதம், சித்தா, யுனானி ஆகிய மருத்துவ முறைகளையும் கையாண்டு வருகிறார்கள். ஒரு நல்ல விஷயம் என்னவென்றால் சிறுவனுக்கு கண்களில் வலி எதுவும் ஏற்படுவதில்லை.

இதுவரை நடந்த கதை : பயங்கர ரோபோட்கள் அடங்கிய டெர்ரோலீனின் படையின் தாக்குதலினால் காயமடைந்து, சக்தியிழந்த ஜீ-மேன் அங்கிருந்து தப்பித்துச் செல்கிறான். ஜீ-மேனுக்கு இது ஒரு பெரிய தோல்வியானாலும், அவனிடம் சில திட்டங்கள் இருக்கின்றன.



தார் பாலைவனத்தில் ஒரு இரகசிய இடத்தில்...

ஒரு புராதன வழியைப் பற்றி ஜீ-மேனுக்குத் தெரியும்...

அந்த வழி தனிப்பட்ட உலகங்களுக்கு* கொண்டு செல்கிறது.

*நம் உலகங்களைப் போல இருந்தாலும் அவை வேறுபட்டவை.

திட்டம் : மற்ற உலகங்களிலுள்ள ஜீ-மேன்னை தன் படையில் சேருமாறு அழைத்து வந்து டெர்ரோலீனின் படையைத் தோற்கடிக்கும் முயற்சியே இது.

ஆனால் இத்தகைய உலகங்கள் உண்மையிலேயே இருக்கின்றனவா?

நம்மை போன்ற மனித இனம் இவ்வுலகங்களில் இருக்கிறதா?

அப்படி இருந்தாலும், அங்கு ஜீ-மேன் இருப்பான் என்று எப்படி சொல்ல முடியும்?






ஹூம்...
இப்போ பார்த்தது வரை எல்லாமே இங்கே இருக்கற மாதிரிதான் தோணுது...

இங்கிருக்கும்
மக்களும்...

ஆனா
இவங்க ஏன் சந்தோஷமா
இல்லை...

இதை
விசாரணை
செஞ்சாகணும்...

மிக வேகமாக பயணம் செய்து ஜீ-மேன் ஒரு நாடோடி இனம் இருக்கும் இடத்தில் சென்றடைகிறான்.



இவ்வளவு நாளா எங்கிருந்தே ஜீ-ேன்

கடவுள் உன்னை காப்பாற்றட்டும் ஜீ-மேன்

அவன் தப்பித்து வந்துவிட்டான்

நீ இன்னும் உயிரோடுதான் இருக்கறயா?

நான் என் கண்களை நம்ப முடியலை!

நம்மை காப்பாத்துரவர் வந்துட்டாரு... ஹுர்ரே!

சத்தம் போடாதீங்க. இங்க என்ன நடக்குதுன்னு யாராவது எனக்கு சொல்ல முடியுமா?




இதெல்லாம் கொஞ்ச வருஷத்துக்கு முன்னாடி ஆரம்பமாச்சு... இலட்சாதிபதி டெர்ரோலீன் உலகத்திலுள்ள எல்லா நிலத்தையும், தொழிற்சாலைகளையும் வாங்க ஆரம்பிச்சான்...


எல்லாரும் ஆனந்தமா இருந்தாங்க. பொருளாதாரமும் நல்லா செழிப்படைஞ்சுது.. நல்ல சம்பளமும் தந்திட்டிருந்தான்...


அப்போ யாருக்கும் அவனோட தீய புத்தியைப் பத்தி தெரியலை. ஆனா, அது உனக்கு மட்டும் தெரிஞ்சிடுச்சு ஜீ-மேன்...
நீ எங்களை எச்சரிச்ச... ஆனா அதுக்குள்ள எல்லாமே முடிஞ்சிடுச்சு... டெர்ரோலீன் எங்க நிலத்தை மட்டுமில்ல எங்க மனசையும் அவனுடைய கட்டுப்பாட்டுல கொண்டு வந்துட்டான்..


ஒரு நாள் தன் தீய திட்டத்தை செயல்படுத்தினான்.
ஒரு பாம்பு மாதிரி...


அப்ப இருந்த நிலைமைல அவன் எல்லாத்தையும் மீறிட்டான்... சட்டத்தையும்... அவன்தான் சட்டம்... அப்படியாயிருச்சு...


அப்புறம் அராஜகம் தாண்டவமாடிச்சு... அவன் சொல்றதை செய்யணும், இல்ல, சாகணும்... அவ்வளவுதான்...



ஜீ-மேன், நீ அவனோட நல்லா சண்டை போட்டே ஆனா மத்தவங்களைப் போல நீயும் ஒரு நாள் எங்கோ மறைஞ்சு போயிட்டே ...

நீ எங்கிருந்தே ஜீ-மேன்

இவங்க எல்லாம் என்ன நம்பியிருக்காங்க... டெர்ரோலீனின் பிடியிலிருந்து இவங்கள விடுதலை செய்யணும்...

ஆனா அவங்களுக்குத் தெரியாது... அவங்க நெனக்கற மாதிரி நான் அந்த ஜீ-மேன் இல்லை.







அடுத்தது : ஜீ-மேன் இன்னுமும் உயிருடன் இருக்கின்றானா? அப்படி உயிரோடு இருந்தாலும், அவனால் எங்களுடைய உலகிற்கு உதவி செய்ய முடியுமா? இத்தகைய உலகங்களுக்கு ஜீ-மேன் பயணம் செய்தது வீணாகிப் போகுமா? இதைப் பற்றி எல்லாம் தெரிந்து கொள்ள நெதர்வோல்டின் அடுத்த இதழைப் பார்க்கவும்...

டி-டவர் வரை சென்றடைய மற்றும் டெர்ரோலீனை எதிர்த்துப் போராட ஜீ-மேனுக்கு உதவி செய்யுங்கள்.








POWER SUPPLY



Visit: www.parleproducts.com

PARLE

# ஜீ-மேன் புதிர்

1. மேஜர் சூர்யராஜ் ______________ பள்ளிக் கூடத்தில் உடற்பயிற்சி சம்பந்தமாக பயிற்சி அளிக்கிறார்.

அ) தூய பீட்டர்
ஆ) தூய மேரி
இ) தூய தாமஸ்

2. டெர்ரோலீன் ______________ கொண்ட ஒரு பெரிய படையை உருவாக்கியுள்ளான்

அ) மெஷீன்கள்
ஆ) அன்ட்ராய்ட்கள்
இ) ரோபோட்கள்

3. டெர்ரோலீனின் ரகசியப் படை T-டவரின் கீழே ___________ இருக்கிறது.

அ) 300 மைல்களில்
ஆ) 100 மைல்களில்
இ) 400 மைல்களில்

4. ஜீ-மேன் அன்ட்ராய்டுகளை அழிக்க ______ கதிரை பயன்படுத்துகிறான்.

அ) பச்சை
ஆ) சிகப்பு
இ) நீலம்

5. ஜீ-மேன் அழித்த அனைத்து ரோபோட்களைவிட அதிகப்படியான __________ மெஷீன்கள் வெளிப்படுகின்றன.

அ) இராட்சத
ஆ) நேர்த்தியான
இ) அழகான

1-இ, 2-ஆ, 3-அ, 4-இ, 5-அ




சூப்பர்ஹீரோக்களுக்கான பவர் சப்ளை

அருணாசல பிரதேச நாட்டுப்புறக் கதை



# வில்வித்தைப் போட்டி

அடர்ந்த காட்டில் பல ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் நடந்த சம்பவம் இது. அந்தக் காட்டிலிருந்த குரங்குகள் அம்பு எய்வதில் தலை சிறந்த வல்லுநர்களாக விளங்கின. குரங்குகள் தங்கள் அம்பு எய்யும் திறமையை பழங்களை வீழ்த்துவதோடு நிறுத்திக் கொண்டதைத் தவிர மற்றவர்கள் மீது எய்வதில்லை. இருப்பினும் அம்புப் பயிற்சி நடக்கும் இடத்தில், மற்றவர்கள் யாரும் நடமாடுவதில்லை. காட்டில் வளர்ந்திருந்த மூங்கில்களைக் கொண்டு வில்லும், பிரம்புக் குச்சிகளால் அம்புகளையும் செய்து வந்து குரங்குகள் அவற்றைப் பயன்படுத்தி வந்தன. இவ்வாறு பல ஆண்டுகள் கழிந்தன. அமைதியாக இருந்த காட்டில் திடீரென பிரச்சினைகள் தோன்ற ஆரம்பித்தன. அதற்கு மூலகாரணமாக இருந்தது குரங்குகளின் தலைவனின் மகனான நட்டிதான்! ஒருநாள் நட்டி தன் நண்பர்களிடம், ''எத்தனை நாள்கள்தான்

''வில்லில் அம்பைப் பொருத்து!''

''அதோ, அந்தப் பழத்தை குறி பார்த்து அம்பை விடு!''

''நாணை இழு... விட்டு விடு...''

''ச்ய்ங்ங்ங்....''

இப்படிப்பட்ட சத்தங்கள் காட்டில் ஒலித்துக் கொண்டிருந்தன. வில்லில் இருந்து விடுபட்ட அம்புகள் சரமாரியாகப் பறந்தன. இது அந்தக் காட்டில் காலை முதல் மாலை வரை நடக்கும் வழக்கமான காட்சி. ஆனால் பயிற்சியாளர்களும், பயிற்சி பெறுபவர்களும் மனிதர்கள் அல்ல; குரங்குகள்.

அருணாசல் பிரதேசத்தில், டிபாங்க் பள்ளத்தாக்கில் இடு மிஷ்மி என்ற காட்டுவாசிகள் வசிக்கும்



நாம் சும்மா பயிற்சியில் மட்டுமே ஈடுபட்டிருப்பது? மரத்திலுள்ள பழங்களைத் தவிர மற்ற எதையும் நாம் அடிப்பதில்லை. மற்ற மிருகங்கள் மீதும் அம்பு விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்? நமது அம்பு எய்யும் திறமையை மற்ற மிருகங்கள் மீது சோதனை செய்ய வேண்டாமா?'' என்று பிரச்சினைக்கு பிள்ளையார் சுழி போட்டது.

''ஆமாம்!'' என்று தலையாட்டின நட்டியின் நண்பர்களான லல்லுவும், காலுவும். ''அந்த திமிர் பிடித்த யானை, புலி ஆகியவற்றின் மீது அம்பு விட்டு வேடிக்கை பார்க்க வேண்டும்'' என்றன.

அதை ஆமோதித்த மிட்டுவும், ஜாபியும், ''அதோ, பதுங்கிப் பதுங்கி கோழியைப் பிடிக்கப் போகிற அந்த ஓநாயையும் ஒரு கை பார்க்க வேண்டும்'' என்றன.

இந்த யோசனை எல்லா இளங் குரங்குகளுக்கும் பி டித்திருந்தது. மற்ற மிருகங்கள் மீது அம்பு விட்டு பயமுறுத்திப் பார்க்க வேண்டும் என்ற வி பரீத ஆ சை அ னைத்துக் குரங்குகளுக்கும் ஏற்பட்டது.

அவ்வளவுதான்! சில நாள்களிலேயே, டிபாங் காடு அல்லோகல்லோலப் பட்டது. குறும்புக்கார குரங்குகள் மற்ற மிருகங்கள் மீது குறி வைத்து அம்பு எய்தி அவற்றை பய முறுத்தின. அவை அம்பு பட்டு கத்திக் கொண்டு ஓடுவதைப் பார்த்து அந்தக் குரங்குகள் விழுந்து விழுந்து சிரித்தன. குரங்குகள் காட்டுவாசி மனிதர்களையும் விட்டு வைக்க வில்லை. அவர்களுடைய தலைப் பாகைகளை 'விர்'ரென்று பறந்து வந்த அம்புகள் தட்டிச் சென்றன. குரங்குகளின் இந்தத் தொல்லை களைப் பொறுக்க முடியாத மற்ற மிருகங்கள் ஒருநாள் அணி வகுத்து காட்டின் கடவுளான அனோவிடம் முறையிடச் சென்றன.

ஒரே சமயத்தில் எல்லா மிருகங்களும் சேர்ந்து தன்னுடன் வந்திருப்பதைக் கண்ட அனோ ஆச்சரியத்துடன், ''என்ன விஷயம்? எல்லாரும் இப்படி கும்பலாக

என்னைக் காண வந்திருக்கிறீர்கள்?'' என்றார்.

''என்னத்தைச் சொல்வோம்! இந்தக் குரங்குகள் படுத்தும் பாடு தாங்க முடியவில்லை!'' என்று அவை முறையிட்டன. முதலில் கஜன் என்ற யானை முன் வந்து புகார் செய்தது. ''குரங்குகளின் குறும்புக்கு அளவே யில்லை. எங்கள் மீது ஓயாமல் அம்பு விட்டு, எங்களுக்கு மிகுந்த தொல்லை கொடுக்கின்றன. நேற்று என் குழந்தை ஆசையாக ஒரு வாழைப்பழம் சாப்பிட்டுக் கொண்டிருந்தது. திடீரென்று அதன் திறந்த வாய்க்குள் ஓர் அம்பு பாய்ந்தது. பார்த்தால் மரக்கிளை மீது அமர்ந்த சில குரங்குகள் அவ்வாறு விஷமம் செய்திருந்தன. என் குழந்தைக்கு வாயில் காயம்பட்டு, இப்போது எதுவுமே சாப்பிட முடியாமல் தவிக்கிறது'' என்றது.

''என்னுடைய காலைப் பாருங்கள்!'' என்று ராபின் முயல் கட்டுப் போட்ட தன் காலைக் காட்டியது. ''ஆண்டு விழா ஓட்டப் பந்தயத்திற்காக நான் பயிற்சி செய்து கொண்டிருந்த போது என் காலில் ஒரே சமயத்தில் நான்கு அம்புகள் 'சர்'ரென்று பறந்து வந்து தைத்து விட்டன. நான் இனி பந்தயத்தில் கலந்து கொள்ளவே முடியாது'' என்று புகார் கூறியது.

''ஓகோ! அப்படியா சேதி! நீங்கள் கவலைப்படாதீர்கள்! அந்தக் குரங்குகளின் கொட்டத்தை நான் அடக்குகிறேன்!'' என்று அனோ ஆறுதல் கூறியது.

பிறகு மறுநாள் அனோ குரங்குகளின் தலைவனை அழைத்து, ''உன் பிரஜைகள் அம்புகள் விட்டு காட்டையே கலக்கிக் கொண்டு இருக்கிறார்களாமே! உண்மையா?'' என்று கேட்டார். அனோவின் உள் நோக்கத்தை அறியாத தலைவன் குரங்கு, ''ஆமாம், என்னுடைய குரங்குகள் மிகப் பிரமாதமாக அம்பு விடுகின்றனர்!'' என்றது. ''அப்படியா? நான் அவர்களின் திறமையைப் பார்க்க விரும்புகிறேன் ஆகையால் உன்னுடைய குரங்குகளிலேயே மிக நன்றாக அம்பு செலுத்தும் குரங்கை நாளைக்கு என்னுடன் போட்டிக்கு அனுப்பு!'' என்றது.

மறுநாள் வில்வித்தைப் போட்டியைக் காண எல்லா மிருகங்களும்



ஆவலுடன் கூ டின. கு ரங்குகளின் சார்பாக ஓ ர் இளம் குரங்கு வில் அம்புகளுடன் போட்டியிடத் தயாராக இருந்தது. அனோவு ம் வில் அம்புகளுடன் வந்தார்.

''போட்டிக்குத் தயாரா? அதோ பார்! ந தியின் அ க்கரையில், கரை யோரமாக, நீரில் ஒரு பெரிய பாறை மூழ்கி உள்ளது. இங்கிருந்து அதைக் குறிபார்த்து அம்பு எய்ய வேண்டும். நான்கு முறை அம்பு எய்யலாம்! ஒரு



தரமாவது, அம்பு அந்தப் பாறையை அடிக்க வேண்டும். முதலில் நான் அம்பு விடுகிறேன்!'' என்று கூறிய அனோ வில்லில் அம்பைப் பொருத்தி குறிபார்த்து எய்தார். அவர் விட்ட அம்பு பாறையின் அருகே சென்று நீருக்குள் மூழ்கி பாறையின் மீது பட்டது. இதுபோல் மூன்று முறை மேலும் அம்புவிட, ஒவ்வொரு முறையும் அம்பு சரியாக பாறையின் மீது பட்டது. பிறகு குரங்கு குறிபார்த்து முதன் முறையாக பாறையின் மீது அம்பு எய்தது. ஆனால் குரங்கு செலுத்திய அம்பு பாறையின் அருகே சென்று நீருக்குள் மூழ்கி மறுபடியும் நீரின் மேல் மிதந்தது பாறையைத் தொடாமலே சென்று விட்டது. குரங்கு தொடர்ந்து மூன்று முறை முயற்சி செய்தது. ஆனால் ஒரு முறை கூட அம்பு பாறையின் மேல் படவில்லை.

''ஓ!'' என்று மற்ற மிருகங்கள் கை தட்டி மகிழ்ச்சியில் ஆரவாரம் செய்தன. பாவம்! குரங்கு களின் முகங்களில் ஈயாட வில்லை. போட்டியில் தோற்றுப் போனதால் தலையைக் கவிழ்ந்த படி அங்கிருந்து சென்று விட்டன.

வெற்றியின் ரகசியம் அனோ விற்கு தவிர வேறு யாருக்கும் தெரியாது. அனோவின் அம்புகள் இரும்பினால் ஆனவை. ஆனால் குரங்கு செலுத்திய அம்புகள் பிரம்புக் குச்சியினால் ஆனவை. அவை நீரில் ஒரு பொழுதும் மூழ்காது.

போட்டியில் தோற்றுப்போன குரங்குகள் அன்றுமுதல் அம்பு விடு வதையே நிறுத்தி விட்டன. அம்பு விடுவதையே நிறுத்தி விட்டன. அம்பு விடும் திறமையையும் இழந்து விட்டன.

# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:



ஒரு வடிகட்டிய கருமி ஒருநாள் அருகில் உள்ள நகரத்திற்குச் செல்ல விரும்பினான். தன்னுடைய பதினைந்து வயது மகனையும் உடன் வரச் சொன்னான். ''நகரத்திற்கு ஆட்டோவில் செல்வோம்'' என்று தன் மகனிடம் கூறினான். அதன்படி ஒரு ஆட்டோவை அழைத்து ''நகரத்திற்குச் செல்ல என்ன வாடகை'' என்று கருமி கேட்டான். அதற்கு ஆட்டோக்காரன் பத்து ரூபாய் கேட்டதும், அவனை வேண்டாம் என்று அனுப்பி விட்டான். சற்று நேரத்திற்குப் பிறகு மற்றொரு ஆட்டோ வந்தது. அவன் பதினைந்து ரூபாய் கேட்க, அவனையும் அனுப்பி விட்டான். மேலும் சற்று நேரத்தில் மூன்றாவதாக ஒரு ஆட்டோ வந்தது. அந்த ஆள் இருபது ரூபாய் கேட்க, அவனையும் அனுப்பி விட்டான். கருமியின் மகனுக்கு சலிப்பு ஏற்பட்டது. ''நீங்கள் ஏன் எல்லாரையும் திருப்பி அனுப்பி விடுகிறீர்கள்?'' என்று தந்தையைக் கேட்டான்.

கீழ்க்காணும் கேள்விகளை கவனியுங்கள்:

- கருமி ஏன் மூன்று ஆட்டோக்களையும் அனுப்பி விட்டான்?
- இறுதியில் தந்தையும், மகனும் நகரத்திற்கு எவ்வாறு சென்றிருப்பார்கள்?

உங்கள் விளக்கங்களை 100-150 வார்த்தைகளில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து அதன் மீது கதைப் போட்டி என எழுதி கீழ்க்காணும் கூப்பனையும் சேர்த்து அனுப்பவும்.

## முடிவு தேதி : ஜூன் 30, 2005

பெயர் ------------------------------------வயது------------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ------------------------------------------------------------------------

வகுப்பு-------------------------------வீட்டு முகவரி----------------------------------------

-----------------------------------------------------------------------------------------------

------------------------------------------------------------------பின்கோடு-------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

## சந்தமாமா இந்தியா லிமிடெட்

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# மனைவிக்கு பயந்தவன்

சுந்தரமும், சங்கரனும் ஒரு கிராமத்தில் ஒரே தெருவில் அருகருகே வசித்து வந்தனர். சுந்தரம் கைதேர்ந்த தச்சன். கிடைத்த வருமானம் சொற்பமாக இருந்ததால், அவனுடைய மனைவி பானுமதி அவனை எப்போதும் உதாசீனமாகப் பேசிக் கொண்டே இருப்பாள். ஆனால் அவளை எதிர்த்து சுந்தரம் ஒரு வார்த்தைகூட பேசமாட்டான். சங்கரன் சொந்தமாக ஒரு பட்டறை வைத்து, இரும்பு, பித்தளைச் சாமான்கள் செய்து வந்தான்.

ஒருநாள் அருகிலுள்ள நகரத்தில் இருந்து சங்கரனைத் தேடி ஒரு வியாபாரி வந்தார். சங்கரனின் தொழில் திறமையைக் கண்ட அவர், அவனை நகரத்துக்கு வருமாறு அறிவுரை கொடுத்தார். சங்கர னின் மனைவியும் த ன் கணவனை நகரத்திற்குத் தொழில் செய்ய அனுப்பினாள்.

இது தெரிந்ததுதான் தாமதம்; பானுமதி சுந்தரத்திடம், ''சங்கரனைப் பாருங்கள்! தன் குடும்பத்தை விட்டுத் தனியாகத் தொழில் செய்ய நகரம் சென்று விட்டார். நீங்கள் மட்டும் கிராமத்தில் உட்கார்ந்து என்ன சாதிக்கப் போகிறீர்கள்? நீங்களும் நகரத்திற்குச் சென்று நன்றாக சம்பாதித்து விட்டு வாருங்கள்!'' என்று அவனை நகரத்திற்குத் துரத்தி விட்டாள்.

சுந்தரம் நேராக நகரத்திற்குச் சென்று நன்றாகத் தொழில் செய்து வந்த சங்கரனிடம் தஞ்சம் புகுந்தான். தனக்கும் ஏதாவது வேலை தேடித் தருமாறு கெஞ்சினான். சங்கரனும் சுந்தரத்தின் மீது இரக்கப்பட்டு, அவனுக்காக எவ்வளவோ முயற்சி செய்தும் பலனில்லை. மூன்று மாதம் நகரமெங்கும் அலைந்து திரிந்து வேலை தேடியும், கிடைக்கவில்லை. கைப்பணம் எல்லாம் செலவழிந்து விட்ட நிலையில், இனி நகரத்தில்

-ரமணன்-

தாக்குப் பி டிக்க மு டியாது எ ன்று தெரிந்து கொண்ட சுந்தரம், கிராமத் திற்குத் திரும்பிவிடத் தீர்மானித்தான்.

ஆனால் தன் மனைவியைப் பற்றி நினைத்தவுடன், அவன் வயிற்றில் புளியைக் கரைத்ததுபோல் இருந்தது. பலவாறு யோசித்து ஒரு தீர்மானத் திற்கு வந்த சுந்தரம், ஒரு நள்ளிரவில் தன் கிராமத்திற்குத் திரும்பினான். தன் மூக்கையும் காதுகளையும் ஒரு துணியினால் மூடிக்கொண்டு, தன் வீட்டுக் கதவைத் தட்டினான். கதவைத் திறந்த பானுமதி சுந்தரத்தின் கோலத்தைக் கண்டு, ''இது என்ன வேடம்?'' என்று கேட்டாள்.

''அதை ஏன் கேட்கிறாய், போ!'' என்று தொடங்கிய சுந்தரம், ''மூன்றே மாதத்தில் மி க நன்றாக ந கரத்தில் தொழில் செய்து சம்பாதித்தே ன். சேகரித்த பணத்தையெல்லாம் உன்னிடம் தந்து உன்னை மகிழ்ச் சியில் ஆழ்த்த நினைத்து, மாலை நேரத்தில் நமது வீட்டிற்குக் கிளம்பினேன். வ ரும் வ ழியில் என்னை முகமூடிக் கொள்ளைக் காரர்கள் மடக்கி, என்னிடமுள்ள பணத்தையெல்லாம் தராவிட்டால், என் மூக்கையும் காதுகளையும் அறுத்து விடுவதாக பயமுறுத்தினர். அதனால்...'' என்று சுந்தரம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, ''ஐயோ!'' என்று அலறினாள் பானுமதி. ''பேசாமல் பணத்தை கொடுத்து விடுவதுதான்! உங்கள் காதையும், மூக்கையும் அறுத்து விட்டார்களா?'' என்று அழுது புலம்பினாள்.

''கவலைப்படாதே, பானுமதி! நீ இப்படி துடிப்பாய் என்று தெரிந்து தான் நான் எல்லாப் பணத்தையும் அவர்களுக்குக் கொடுத்து விட்டேன். எனக்கு ஒன்றுமே ஆகவில்லை'' என்று தைரியமாக, தன் காது களையும், மூக்கையும் மூடியிருந்த துணியை விலக்கினான்.

ஒரு க ணம் தி கைத்தாலும், பானுமதி பிறகு, ''பணம் போனால் போகிறது! உ ங்களை ஒ ன்றும் செய்யாமல் விட்டார்களே! இனி நீங்கள் நகரத்திற்குச் சென்று சம்பாதிக்க வேண்டாம். இ ங்கேயே தொழில் செய்யுங்கள்'' என்று உள்ளே அழைத்துச் சென்றாள்.





# போலி சன்னியாசி

வெகு காலத்திற்கு முன் பாஞ்சால நாட்டை ரேணுகன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் சாது சன்னியாசிகளை மி கவும் ம தித்து கௌரவிப்பான். ஒரு முறை இமய மலையிலிருந்து மகாரட்சிதர் என்ற முனிவர் தம் பல சீடர்களுடன் பாஞ்சால நாட்டிற்கு வந்தார். அவரை ரேணுகன் வரவேற்று உபசரித்து எல்லாரும் தங்க வசதிகளைச் செய்து கொடுத்தான்.

மழை ஆரம்பமாகி விட்டது மகாரட்சிதரும் த ன் ச ாதுர்மாச விரதத்தை அங்கேயே மேற்கொண்டு நான்கு மாதங்கள் சீடர்களுடன் தங்கி விட்டார். ப ாஞ்சால ம ன்னனும் அவர்கள் எல்லாருக்கும் எவ்விதக் குறையும் இல்லாது பார்த்துக் கொண்டான். மழைக்காலம் முடிந்து சாதுர்மாச விரதமும் முடியவே மகாரட்சிதர் ரேணுகனிடம் விடை பெற்றுக் கொண்டு தம் சீடர்களுடன் இமயமலைக்கு கிளம்பினார். அன்று மத்தியானம் மகாரட்சிதரும் அவரது சீடர்களும் வழியில் ஓரிடத்தில் தங்கி இளைப்பாறினார்கள். அப்போது யாவரும் பாஞ்சால மன்னனின் உதார குணத்தைப் பாராட்டிப் பேசினர். சீடர்களில் சோதிடம் தெரிந்த ஒருவன் ''பாஞ்சால மன்னனுக்கு இப்போது குழந்தையே பிறக்கவில்லை. ஆயினும் அடுத்த ஆண்டிற்குள் ஒரு ஆண் குழந்தை பிறக்கப் போகிறது அது தெய்வாம்சத்தோடு கூடி எல்லா ராலும் மதிக்கப்பட்டு வரும்'' என்றான்.

இதைக் கேட்ட யாவரும் மகிழ்ந்தனர். அந்தச் சீடர்களில் ஒரு போலி சன்னியாசி இருந்தான். அவன் மனதில் பாஞ்சால மன்னனிடம் இந்த நற்செய்தியைக் கூறி நிறையப் பரிசு பெற வேண்டுமென்ற ஆசை பிறந்தது.

எனவே அ வன் ஏ தோ ச ாக்குச் சொல்லி அந்தக் கூட்டத்தோடு போகாமல் பின் தங்கினான். பிறகு

பாஞ்சால மன்னனின் தலைநகருக்குப் போய் மன்னனைக் கண்டு ''அரசே உமக்கு அடுத்த ஆண்டிற்குள் அழகிய ஆண் குழந்தை பிறக்கும். இதை என் ஞான திருஷ்டியால் அறிந்தேன்'' என்றான்.

அது கேட்டு மன்னன் மகிழ்ந்து ''மிக்க மகிழ்ச்சி, யோகீஸ்வரரே! நீங்கள் இங்கேயே இருந்து எமக்கும் என் குழந்தைகளுக்கும் நற்போதனை களை அளித்து வாரும்'' எனக் கூறி அரண்மனை ஓரத்தில் ஒரு தோட்டத்தை அமைத்து வசதியான வீட்டையும் கட்டிக் கொடுத்தான்.

அந்தப் போலி சன்னியாசி அத்தோட்டத்தில் காய்கறிகளைப் பயிரிட்டு அவற்றை விற்றுப் பணம் சேர்க்கலானான். அவனிடம் நிறைய பணம் சேரலாயிற்று.

ஓராண்டு கழிந்தது. அம்மன்னனின் மனைவி ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். போதிசத்வரே அப்படி பிறந்தவர். அவருக்கு சுமனன் என்ற பெயர் வைத்து வளர்த்தார்கள். அவனும் வளர்ந்து பெரியவனானான்.

அப்போது அந்தப் போலி சன்னியாசி அரண்மனைத் தோட்டத் திலேயே இருந்தான். அரசனுக்கோ அவன் சொல்வதுதான் வேத வாக்காக இருந்தது. அவனது கபடத்தன்மையை ரேணுகன் அறியவில்லை. சுமனனோ அறிந்து கொண்டு விட்டான்.

அவன் அந்த சன்னியாசியின் உண்மை குணத்தை வெளிபடுத்த தீர்மானித்துக் கொண்டான். ஒருநாள் போலி சன்னியாசி காய்கறி



தோட்டத்தில் பாத்தி கட்டிக் கொண்டு இருந்த போது சுமனன் ''ஏய் தோட்டக் காரா!'' என்று உரக்கக் கத்திக் கூப்பிட்டான்.

இது போலி சன்னியாசிக்கு எரிச்சலை மூட்டியது. சுமனன் தன்னைப் பற்றித் தெரிந்து கொண்டு விட்டான் என அவன் கண்டு அவனைப் பழி வாங்க எண்ணினான். அதற்கான வழியும் அவனுக்கு தெரிந்தது. அதன்படி ஒருநாள் அரசன் வரும் வேளைக்குத் தன் வீட்டிலிருந்த பொருள்களை எல்லாம் வாரி மூலைக்கு ஒன்றாகப் போட்டு விட்டு தன் உடலில் எண்ணெய் தடவிக் கொண்டு போலி சன்னியாசி படுத்து முனகலானான்.

ரேணுகன் தான் மதிக்கும் யோகியின் நிலை கண்டு ''சுவாமி! என்ன இது? யார் இப்படிச் செய்தது?''

எனக் கேட்டான். அந்த சன்னியாசியும் ''எல்லாம் உன் மகன் சுமனன் தான். என்னையும் அடித்து என் பொருள்களை எல்லாம் தூக்கிப் போட்டு உடைத்து விட்டான்'' என்றான். உடனே ரேணுகன் தன் வீரர்களிடம் ''இப்படி அக்கிரமம் செய்த சுமனனின் தலையை வெட்டி எறியுங்கள்'' என்று கட்டளை இட்டான். கட்டளையை நிறைவேற்றத் தலையாரி சுமனனைக் காணச் சென்றான். அப்போது அவன் தன் தாயுடன் இருந்தான். தந்தையின் கட்டளையைக் கேட்டு அவன் ரேணுகனைக் கண்டு ''தந்தையே, நீங்கள் மகாத்மா என்று போற்றும் பேர்வழி போலி சன்னியாசி. பேராசை பிடித்தவன். அரண்மனையில் காய்கறி பயிரிட்டு காவல் வீரர்களை விற்று வரச் சொல்லி பணம் சேர்த்து வைத்திருப்பவன். உண்மையை விசாரியுங்கள்'' என்றான்.

ரேணுகனும் தன் அரண்மனைக் காவலாளிகளை விசாரித்து சுமனன் கூறியது உண்மையே எனத் தெரிந்து கொண்டான். போலி சன்னியாசியின் வீட்டைச் சோதனை போட்டதில் அவன் மறைத்து வைத்திருந்த ஏராளமான பணமும் அகப்பட்டது.

உடனே ரேணுகன் போலி சன்னியாசியை மிரட்டவே அவன் உண்மையை ஒப்புக் கொண்டான். சுமனன் அவனை ஒன்றுமே செய்யவில்லை என்பதும் வெளியாயிற்று. பொய்க் கு ற்றச்சாட்டுகளுக்காக சன்னியாசிக்கு மன்னன் மரண தண்டனை விதித்தான்.

தான் தவ று செய்ததாக கூறி ரேணுகன் சுமனனை ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் படிக் கூறினான். அவனோ ''வேண்டாம். நான் இமயமலைக்குப் போய் தவம் செய்கிறேன்'' எனக் கூறிக் கிளம்பி விட்டான்.

ரேணுகனுக்கு அப்போது முதல் சன்னியாசிகள் என்றாலே எரிச்சல். எந்த சன்னியாசி அவனைக் காண வந்தாலும் அவரை அவன் மதிக்கவில்லை. ஒரு போலி சன்னியாசியின் செய்கையால் நல்ல சன்னியாசிகளுக்கும் மதிப்பு போயிற்று.





# மகாவிஷ்ணு

**கா**ந்தார மன்னனின் புதல்வி காந்தாரி. அவள் திருதராஷ்டிரனை மணந்து துரியோதனன் முதலிய நூற்றொரு மக்களைப் பெற்று எடுத்தாள். இவளின் தம்பி தான் சகுனி.

காந்தாரியின் ஜாதகப்படி அவள் கல்யாணமானதும் விதவையாகி விடுவாள் என்று இருந்ததால் காந்தார மன்னன் முதலில் தன் மகளை ஒரு ஆட்டிற்கு திருமணம் செய்து வைத்து அதனைக் கொன்றுவிட்டுப் பிறகே அவளை திருதராஷ்டிரனுக்கு மணம் செய்து வைத்தான். இதைத் தாண் பீமன் துரியோதனனைப் பார்த்து ''அடே! விதவைக்குப் பிறந்தவனே'' எனக் கூறி கேலி செய்தான். அப்போதுதான் இந்த விவரம் துரியோதனனுக்குத் தெரிந்தது.

இதனால் கோபம் கொண்டு துரியோதனன் காந்தார மன்னனையும் சகுனியையும் பிடித்து சிறையில் அடைத்தான். காந்தார மன்னன் தவ வலிமை பெற்றவன். அவன் இறக்கும் முன் தன் மகனிடம் ''என் அஸ்திகளை எடுத்து சூதாட்டப் பகடைகளாக்கி துரியோனனைப் பழிக்குப் பழி வாங்கு'' என்றான். சகுனியும் அவ்வாறே பகடைகளைத் தயாரித்தான்.

துரியோதனன் சகுனி தன்னை அழித்துவிடுவானோ எனப் பயந்து அவனை சிறையிலிருந்து விடுதலை செய்து தன் மந்திரியாக ஆக்கிக் கொண்டான். அஸ்தினாபுரத்தில் சகுனியும் தருமரும் சூதாட்டம் ஆடினர். அதில் தருமர் தன் தம்பி களையும் மனைவியையும் பந்தயம்



வைத்துத் தோற்றார். அதே சமயம் துவாரகையில் கிருஷ்ணரும் சத்திய பாமாவுடன் சூதாடி தன்னையும் ருக்மிணி முதலிய தன் ஏழு மனைவிகளையும் தோற்றார். அப்போது பாமா ''ருக்மிணி! நீயும் இவரும் இனி என் அடிமைகள்'' எனக் கேலியாகக் கூறி ருக்மிணியின் முந்தானையைப் பற்றி இழுத்தாள். அப்போது கிருஷ்ணர் ''உம். நிறைய வரட்டும்'' என்றார். அதுகேட்டு யாவரும் கிருஷ்ணர் ஏன் அப்படிக் கூறினார் என்பது தெரியாமல் திகைத்தனர்.

அச்சமயத்தில் தான் துச்சாதனன் சபை நடுவே திரௌபதியை நிறுத்தி அவளது ஆடைகளைக் களைய முயன்றான். அவன் அவளது புடவை யின் தலைப்பைப் பிடித்து இழுக்க இழுக்க அது வந்து மலைபோலக் கீழே விழுந்து குவியலாயிற்று. துச்சாதனனின் முயற்சி பலிக்க வில்லை. முடிவில் அவன்தான் களைத்துப் போய்க் கீழே விழுந்தான். திரௌபதி அப்போது 'கிருஷ்ணா' எனக் கூவியதை துவாரகையில் கேட்டபோது தான் கிருஷ்ணர் ''உம் நிறைய வரட்டும்'' எனக் கூறினார்.

திரௌபதியை மானபங்கம் செய்ய நினைத்த துரியோதனன், கர்ணன், சகுனி முதலானோர் தம் முயற்சி பலியாதது கண்டு தலை குனிந்து கொண்டார்கள். கோபம், ஆசை, கர்வம், வெறுப்பு ஆகிய குணங்களே துரியோதனனாகப் பிறந்தன. நர நாராயணர்களுக்கு பயந்து ஓடிய சகஸ்ரகவசன் சூரியனில் ஒளிந்து கொண்டான். அப்போது குந்தி சூரியதேவனை வேண்ட கர்ணனை அவள் பெற்றெடுத்தாள். குந்தி பாண்டு மன்னனை மணந்தபின் நரன் அவளது மகன் அர்ஜுனனாகப் பிறந்தான். நாராயணன் கிருஷ்ணராக அவதரித்தார்.

கர்ணன் மாவீரன். அப்படிப் பட்டவன் தன்னோடு இருக்கையில் பாண்டவர்களை எளிதில் வென்று விடலாம் என துரியோதனன் நம்பினான். கன்னியாக இருக்கையில் தனக்குக் குழந்தை பிறந்ததே என குந்தி பயந்து அக்குழந்தையை ஒரு பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டு விட்டாள். அக்குழந்தையை ஒரு தேரோட்டி கண்டெடுத்து தன் மகனாக வளர்த்தான். அதனால் கர்ணன் தேரோட்டி மகன் என்ற பெயர்

பெற்றான். அ வனுக்கு உ யர்ந்த அந்தஸ்து அ ளிக்க து ரியோதனன் அவனை ஒரு நாட்டு மன்னனாக் கினான்.

கர்ணனுக்குப் பல சாபங்கள் கிடைத்தன. அவனுடைய உடலோடு ஒட்டிப் பிறந்த கவசத்தையும் குண்டலங்களையும் பிராம்மண வடிவில் இந்திரன் தானம் பெற்றுக் கொண்டு போனான். இதைக் கூறாமல் துரியோதனனிடம் தன் சக்தி அபாரம் எனக் கூறி அவனது ஆசை களை வளர்த்து வந்தான். கர்ணன் அர்ஜுனனைத் தன் எதிரியாகக் கருதி அவனைக் கொல்லவே துரியோதன னோடு சேர்ந்து கொண்டான்.



சத்தியபாமா தான் சூதாட்டத்தில் வென்ற கி ருஷ்ணரை ந ாரதருக்கு தானம் செய்ய வேண்டியதாயிற்று. அவள் தன் கணவனைத் தனக்குக் கொடுக்கும்படி நாரதரிடம் கேட்க அவரும் கிருஷ்ணரது எடைக்குச் சமமாக தங்கம் தந்தால் அவரை அவளுக்குக் கொடுப்பதாகக் கூறினார். உடனே பாமா தராசின் ஒரு தட்டில் கிருஷ்ணரை உட்கார வைத்து மறுதட்டில் தன் நகைகளை எல்லாம் குவித்து வைத்தாள். எவ்வளவு தங்கம் வைத்தபோதிலும் கிருஷ்ணர் அமர்ந்திருந்த தட்டு உயர்ந்து சம நிலைக்கு வரவில்லை. பாமா அது கண்டு திகைத்து நின்றாள்.

அப்போது ருக்மிணி ''பாமா! கிருஷ்ணர் தங்கத்தால் வாங்கக் கூடியவர் அல்ல. அவரை பக்தியாலே தான் பெற முடியும்'' என்று அவரை வணங்கி ஒரு துளசி இலையை தங்கம் இருந்த தட்டில் வைத்தாள். அப்போது கிருஷ்ணர் அமர்ந்திருந்த தட்டு உயர்ந்து சமநிலையை அடைந்தது. பாமா தலைகுனிய, ருக்மிணி கிருஷ்ணரைத் தன் பக்தியால் நாரதரிடமிருந்து விடுவித்தாள்.

பாண்டவர்கள் தம் அஞ்ஞாத வாச காலத்தை விராட மன்னனிடம் கழித்தார்கள். பீமன் வல்லபன் என்ற பெயரில் சமையல்காரனாக இருந்தான். திரௌபதி சைரந்திரி என்ற பெயரில் ராணியின் தோழியாக இருந்தாள். சைரந்திரியைச் சீண்டிய விராட மன்னனின் மைத்துனன் கீசகனை பீமனாகிய வல்லபன் கொன்றான். சமபலம் கொண்ட ஐவருள் மூவரை பீமன் கொன்றான். எஞ்சி இருந்தவன் துரியோதனனே.

பிருகன்நாளை என்ற பெயரில்



இருந்த அர்ஜுனன் விராட மன்னன் புதல்வி உத்தரைக்கு நாட்டியம் கற்றுக் கொடுத்தான். கௌரவர்களையும் கர்ணனையும் அர்ஜுனன் தோற் கடித்து விரட்டினான். சுபத்திரைக்கும் அர்ஜுனனுக்கும் பிறந்த அபிமன் யுவிற்கும் உத்தரைக்கும் விவாகம் நடந்தது. பின்னர் அபிமன்யுவும் உத்தரையும் துவாரகைக்குச் சென்றனர்.

பலராமனின் புதல்வி வத்சலா. அவள் அபிமன்யுவை நேசித்தாள். அபிமன்யுவும் அ வளை வி ரும்பி னான். ஆனால் பலராமர் தன் மகளை துரியோதனனின் மகன் லட்சுமண குமாரனுக்கு மணம் செய்து வைக்கத் தீர்மானித்தார்.

அபிமன்யு தன் தாயுடன் துவாரகைக்குச் செல்லும் வழியில் பீமனின் மகன் கடோத்கசனைச் சந்தித்தான். அவனது உதவியால் அபிமன்யு வத்சலாவை மணந்தான். கடோத்கசன் பல மாயாஜாலங்கள் செய்து கௌரவர்களைத் திணற அடித்தான். அவன் மாய வத்சலாவாகி லட்சுமணகுமாரனின் ம ணப் பந்தலில் அமர்ந்து அவனை இம்சைப் படுத்தினான். லட்சுமண குமாரன் பயந்து தனக்கு கல்யாணமே வேண்டாம் என அலறினான். இப்படி ஒரேயடியாகக் குழப்பம் ஏற்பட கிருஷ்ணர் வந்து பலராமரை சமாதானப் படுத்தி நடந்ததைக் கூறினார். பிறகு வத்சலாவின் கல்யாணம் அபிமன்யுவுடன் நடந்தேறியது.

அபிமன்யு முன்பிறப்பில் கம்சன். கம்சனின் மு ன்பிறப்பு க ாலநேமி. அந்தக் காலநேமி எதிரியான போதிலும் இப்போது தன் மருமக னாகப் பிறந்ததால் கிருஷ்ணர் அவனை மாவீரனாக்க நினைத்தார்.

சுபத்திரை கர்ப்பமாக இருந்த போது அர்ஜுனன் அவளிடம் போர்முறைகளைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தான். அதனை சுபத் திரையின் கர்ப்பத்தில் இருந்த சிசுவான அபிமன்யு கேட்டுக் கொண்டிருந்தான். அப்போது கிருஷ்ணர் வந்து ''அர்ஜுனா! இந்த நிலையிலா போர்முறைகளை என் தங்கையிடம் கூறுவது? வா, வா'' எனக் கூறி அவனை எழுப்பி அழைத்துப் போனார். அப்போது அர்ஜுனன் கூறிக் கொண்டிருந்தது பத்மவியூகத்தில் நுழையும் விதமே. ஆனால் அதிலிருந்து வெளியேறும்

விதத்தை அவன் கூறுமுன் கிருஷ்ணர் அவனை அழைத்துச் சென்றதால் அபிமன்யுவிற்கு பத்மவியூகத்துள் நுழையும் விதம் மட்டுமே தெரிந்தது. அதிலிருந்து வெளியே வரும் முறை தெரியவில்லை. இந்த அபிமன்யு தான் மாபெரும் வீரனாகி தானே தன்னந்தனியாகக் கௌரவப் படையையே அழித்துவிடுவதாகத் தோள் தட்டினான்.

அஞ்ஞாத வாசம் முடிந்ததும் பாண்டவர்களைப் பார்த்துப் பேசத் திருதராஷ்டிரன் விரும்பவே கிருஷ்ணர் அவர்களது தூதுவராகச் சென்றார். துரியோதனனோ ஊசி முனையளவு இடம் கூடப் பாண்டவர்களுக்கு கொடுக்க முடியாது எனக் கூறி கிருஷ்ணரைப் பிடிக்க முயன்றான். அவரோ விசுவரூபம் எடுத்து யாவரையும் திகைக்க வைத்தார். பாரதப்போர் மூண்டது. கிருஷ்ணரின் உதவியை நாடி துரியோதனனும் அர்ஜுனனும் ஒரே சமயத்தில் சென்றனர். துரியோதனன் கர்வத்துடன் கிருஷ்ணரின் தலைப் பக்கம் அமர்ந்தான். அர்ஜுனனோ அவரது காலின் பக்கம் உட்கார்ந்தான். கட்டிலில் படுத்திருந்த கிருஷ்ணர் கண் விழித்ததும் முதலில் காலின் பக்கம் அமர்ந்திருந்த அர்ஜுனனைப் பார்த்தார். பிறகே துரியோதனனைக் கண்டார். தாம் போரில் தனியாக ஒருவர் பக்கத்திலும், தன் படைகளை மற்றவருக்கும் கொடுப்பதாக அவர் கூறி முதலில் யார் வேண்டும் என்று கேட்கும் உரிமையை அர்ஜுனனுக்கு அளித்தார். அவனும் கிருஷ்ணர் தம் பக்கம் இருந்தாலே



போதும் எனவே துரியோதனன் மகிழ்ந்து கிரு ஷ்ணரது ப டைகள் தனக்குப் போதும் எனக்கூறி விடை பெற்றான்.

குருஷேத்திர மைதானத்தில் போர் தொடங்கியது. இந்தக் குருஷேத்திரத் தில் தான் இதற்கு முன் பரசுராமர் ஷத்திரியர்களை பலியிட்டு அவர் களது இரத்தத்தை மடுக்களில் நிரப்பி வைத்திருந்தார். அதே இடம் மீண்டும் ஷத்திரியர்களின் இரத்தத்தைக் குடிக்கத் தயாராகிவிட்டது.

சஞ்ஜயனுக்கு விசேஷப் பார்வை ஏற்பட்டது. அதனால் குருஷேத்திர மைதானத்தில் நடக்கும் போர்க் காட்சிகளை தி ருதராஷ்டிரனுக்கு அவ்வப் போது கூறி அவனது மனக்கண் கொண்டு பார்க்க வைத் தான். தன் கணவனுக்குக் கண் தெரியாததால் காந்தாரியும் தன் கண்களைக் க ட்டிக் ெ காண்டு பார்வையற்றவள் போல இருந்து வந்தாள். அவளும் மற்றும் சிலரும் திருதராஷ்டிரனோடு அமர்ந்து சஞ்ஜயன் கூறி வந்ததைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

பாண்டவர் படைபலம் பற்றியும் கௌரவர்களின் படைவீரர்களைப் பற்றியும் சஞ்ஜயன் கூறி சமபலம் கொண்டவர்களாக இரு தரப்பினரும் இருந்தாலும் கிருஷ்ணர் பாண்டவர் களின் பக்கம் இருப்பதால் அவர்கள் கை ஓங்கும் என்று போர்க்களத்தில் நடப்பதை வர்ணிக்கலானான்.

பிதாமகர் பீஷ்மரின் தலைமையில் கௌரவர்களின் படை ஒரு புறம் அணிவகுத்து நின்றது. அதற்கு நேர் எதிர்புறமாக பாண்டவர்களின் படை திருஷ்டத்யும்னனின் தலைமையில் நின்றது. கௌரவர்களின் தரப்பில் பீஷ்மர், துரோணர், கிருபாசாரியர், கர்ணன், விகர்ணன் அசுவத்தாமன், பூரிசிரவன் போன்ற மாபெரும் வீரர்கள் இருந்தனர்.

பாண்டவர் தரப்பில் திருஷ்டத் யும்னன், பீமன், அர்ஜுனன், யுயுதானன், விராடன், துருபதன், திருஷ்டகேது காசி மன்னன், புருஜித், குந்திபோஜன், அபிமன்யு, திரௌப தேயர்கள் போன்ற மாபெரும் வீரர்கள் இருப்பதையும் அவன் திருதராஷ்டிரனிடம் கூறினான்.



### இந்தியாவில் அறிந்திராத இடங்கள்

# பவானி என்ற அழகிய தீவு

நாற்புறமும் தண்ணீரால் சூழப்பட்ட இடத்தை தீவு என்று சொல்கிறோம். இந்தியாவில் அந்தமான் நிகோபார், இலட்சத்தீவுகள், மினிக்காய் போன்ற தீவுகள் வங்காள விரிகுடாவிலும் அரபிக் கடலிலும் அமைந்துள்ளன. இவையன்றி, நதிகளின் நடுவே அமைந்துள்ள தீவுகளும் இந்தியாவில் உண்டு. அப்படிப்பட்ட ஒரு அழகான தீவுதான் பவானி. இது ஆந்திர மாநிலத்தில் கிருஷ்ணா நதியில் அமைந்துள்ளது. விஜயவாடா நகரத்திலிருந்து 4 கி.மீட்டர் தொலைவில், பிரகாசம் அணைக்கட்டுக்கு அருகில் அமைந்துள்ளது இந்தத் தீவு.

இந்தத் தீவுக்கு பர்ஹம் பார்க்கிலிருந்து படகுகள் மூலம் செல்லலாம். கிருஷ்ணா நதியில் படகு செல்லத் தொடங்கிய சில நிமிடங்களிலேயே தீவு நம் கண்களில் படுகிறது. தீவில் காலடி எடுத்து வைத்தவுடன் இயற்கை எழில் கொஞ்சும் ஒரு சொர்க்கபுரியை அடைந்து விட்டது போல் ஒரு பிரமிப்பு உண்டாகிறது. தீவைச் சுற்றிப் பார்க்கையில் இயற்கை அன்னையின் மடியில் தவழ்ந்து விளையாடுவதுபோல் தோன்ற, நாம் ஒரு கற்பனை உலகுக்கே விரைந்து செல்கிறோம்.

கிருஷ்ணா,கோதாவரி ஆகிய இரு நதிகளிலும் பல தீவுகள் இருந்தாலும், பவானி அவற்றை விட மிகப் பெரியது. தீவில் காணப்படும் ஓடைகளும், பசுமையான புல்வெளிகளும், அடர்ந்த காடுகளும் மனதிற்கு மிக ரம்மியமாக காட்சி அளிக்கின்றன. இத்தகைய இயற்கை அன்னையின் எழில் ஓவியத்தைக் காண பல உல்லாசப் பயணிகள் வருவதில் வியப்பு ஒன்றுமில்லை.

ஆந்திர மாநிலத்தின் தலைநகரான ஐதராபாதிலிருந்து 275 கி.மீ தொலைவில் உள்ள விஜயவாடாவை தரை மார்க்கமாக அடைந்து, அங்கிருந்து பவானித் தீவுக்குச் செல்ல முடியும்.







# சிறந்த சோதிடர் யார்?

ஒரு ஊரில் பத்திரசேனர் என்ற மிகப்பிரபலமான கைரேகை நிபுணர் இருந்தார். ஒருவனது கைரேகை களைப் பார்த்தே, அவன் மனதில் என்ன நினைக்கிறான், என்ன அறிய விரும்புகிறான் என்பதைக் கண்டு பிடித்து விடுவார். அவர் புகழ் நாளுக்கு நாள் ஓங்க கர்வமும் தலை தூக்கியது. அவருடைய புகழைக் கேள்விப்பட்டு, மற்ற சோதிடக் காரர்கள், கைரேகை நிபுணர்கள் அந்த ஊருக்கு வருவதேயில்லை. அப்படி ஓரிருவர் வந்தாலும், அவர்கள் சோதிடம் பார்க்க முடியாதவாறு சாஸ்திரத்தில் பல ஆழ்ந்த கேள்வி களைக் கேட்டு அவமானப்படுத்தி அனுப்பி விடுவார்.

ஒருநாள் ராமாசாஸ்திரி என்ற ஒரு கைரேகை நிபுணர் அந்த ஊருக்கு வந்து சேர்ந்தார். அவர் வருகையை அறிந்த பத்திரசேனர் ராமாசாஸ்திரியை ஒருநாள் தன் வீட்டுக்கு அழைத்து ''உனக்கு ரேகை சாஸ்திரத்தைப் பற்றி முழுதாகத் தெரியுமா?'' என்று கிண்ட லாகக் கேட்டார். அதற்கு சாஸ்திரி, ''ஏதோ கொஞ்சம் தெரியும்,'' என்றார்.

''அரைகுறையாக சாஸ்திரம் படித்த நீ இந்த வேலைக்குத் தகுதி அற்றவன். நீ உடனே இந்த ஊரை விட்டுச் சென்று விடு'' என்று பத்திரசேனர் அவரை மிரட்டினார். இதைக் கேட்டதும் ''ஐயா, உங்களை மிகுந்த திறமைசாலி என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். யார் சிறந்த சோதிடர் என்பது சோதித்துப் பார்த்தால் தான் தெரியும்'' என்று சவால் விட இருவருக்கும் வாக்குவாதம் முற்றியது. உடனிருந் தவர்கள் அவர்களை விலக்கி விட்டு, பத்திர சேனரை நோக்கி, ''சாஸ்திரி சொல்வது சரி என்று எங்களுக்குப் படுகிறது. உங்கள் இருவருடைய திறமையையும் சோதித்துப் பார்க்கலாமே!'' என்றனர்.

-25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை-

அந்த சமயம் பார்த்து பக்கத்து கிராமத்திலிருந்து ஜமீன்தார் ஒருவர் முதன் மு தலாக ப த்திரசேனரைப் பார்க்க வந்திருந்தார். உடனிருந்த வர்கள் அவரை வரவேற்று, ''ஜமீன்தார் அவர்களே! பத்திர சேனரைப் பார்க்க வந்திருக்கும் நீங்கள், புதியவரான இந்த ராமாசாஸ்திரியிடமும் கையைக் காட்டுங்கள். யார் உங்கள் மனதில் உள்ளதையும், உங்களைப் பற்றியும் சரியாக சோதிடம் கூறுகிறார்கள் என்று சோதிக்க விரும்புகிறோம்'' என்றனர்.

அதன்படி முதலில் ஜமீன்தார் பத்திரசேனரிடம் தன் கையைக் காட்டினார். அவரும் கைரேகையைப் பார்த்து விட்டு, ''ஜமீன்தார் அவர்களே! ''உங்களிடம் ஏராளமான சொத்து உள்ளது. ஆனால் நீங்கள் ஒரு வடிகட்டிய கஞ்சன். யாருக்கும் காலணாக் காசுகூட கொடுக்க யோசிப் பீர்கள். நீங்கள் மனைவிக்கு பயந்தவர். உங்கள் மனைவி உங்களை ஆட்டிப் படைப்பவள்'' என்றார்.

'விருட்'டென்று தன் கையை இழுத்துக் கொண்டார் ஜமீன்தார். ''போதும் நீ சோதிடம் கூறிய அழகு! என்னைப் பற்றித் தவறாக உளறு கிறாய்!'' என்றவர், நேராக சாஸ்திரி யிடம் தன் கையைக் காட்டினார். சாஸ்திரி அவருடைய கையை உற்றுப் பார்த்து விட்டு, ''ஜமீன்தார் அவர்களே! நீங்கள் பெரிய செல்வர். ஆனால் வீணாகப் பணத்தை செலவழிக்க மாட்டீர்கள்? உங்களுடைய பூர்வ ஜென்ம புண்ணியத்தால் அருமை



யான மனைவி உங்களுக்கு வாய்த்திருக்கிறாள். அவள் உங்களுடைய நலனில் அ க்கறை ெ காண்டவள். சிறந்த அறிவாளி. ஆகவே அவள் கூறும் வார்த்தைகளுக்கு மதிப்பு கொடுத்து அவள் மனம் கோணாமல் நடப்பீர்கள்'' என்றார்.

அதைக் கேட்ட ஜமீன்தாரின் முகம் அளவில்லாத மகிழ்ச்சியில் பிரகாசித்தது. உடனே, ''சபாஷ்! உங்கள் சோதிடம் பிரமாதம்! அருகில் இருந்து பார்த்தது போல், என்னைப் பற்றி மிகவும் சரியாகக் கூறுகிறீர்கள்'' என்று பாராட்டினார்.

உடனே சாஸ்திரி சாமர்த்தியமாக, ''ஜமீன்தார் அவர்களே! நீங்கள் ஒரு கொடைவள்ளல். உங்களைப் பற்றி சரியாக சோதிடம் கூறியதற்காக உங்களுடைய ே மாதிரத்தையே எனக்குப் பரிசாக அளிக்கலாம் என்று நினைக்கிறீர்கள்!'' என்றார்.

ஜமீன்தார் அதைக் கேட்டதும் திடுக்கிட்டார். ஆனால் பலர் முன்னிலையில் சாஸ்திரி கூறுவதை மறுக்க முடியாததால் தன் மோதிரத்தை சாஸ்திரிக்கு அரைமனதாகக் கொடுத்து விட்டுச் சென்றார்.

உடனிருந்தவர்கள் ஆச்சரியத்தில் மூழ்கினர். உடனே சாஸ்திரியை வானளாவப் புகழத் தொடங்கினர். அவர்களை கையமர்த்திய சாஸ்திரி ''தயவு செய்து நான் அவரை விட சிறந்த சோதிடர் என்று நீங்கள் முடிவு கட்ட வேண்டாம். உண்மையில் பத்திரசேனர் தான் சிறந்த கைரேகை நிபுணர். ஜமீன்தாரைக் குறித்து அவர் கூறிய சோதிடம் முற்றிலும் சரியே! ஆனால் கூறிய விதம்தான் சரியில்லை. சற்று யோசித்துப் பாருங்கள்! அவர் சொன்ன அதே விஷயத்தைத் தான் நானும் கூறினேன். ஆனால் நான் கூறிய விதம் முற்றிலும் மாறுபட்டு ஜமீன்தாரை மகிழ்விப்பதாக அமைந்தது. சோதிடக்காரருக்கு சாஸ்திரம் மட்டும் நன்றாகத் தெரிந்து பயனில்லை. அதை இடம், பொருள், ஏவல் பார்த்து எவ்விதத்தில் இனிமையாகக் கூற வேண்டுமோ, அவ்வாறு கூற வேண்டும். இதுதான் விஷயம்'' என்று கூறி முடித்தார்.



23

# சூர்யா

**வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்**

*கனகதுர்கா தேவியின் விக்கிரகத்தைக் கோயிலில் பிரதிஷ்டை செய்யப்படுவதைத் தடுக்க முயற்சிக்கும் வீரசிம்மன், மனம் மாறி அதற்குப் பதிலாக சுகதேவனின் மகளை தனக்குத் திருமணம் செய்து வைக்குமாறு கேட்கிறான். அதற்கு ஒப்புக் கொண்ட சுகதேவனின் மகள் ஜபர்சிங் தொடர்ந்து வர, யானை மீது ஏறி வீரசிம்மனை நோக்கிச் செல்கிறாள். வழியில் ஒரு குரங்கு ஜபர்சிங்கை தாக்க, சுகன்யா தப்பித்து ஓடி விடுகிறாள். பிறகு...*

ஓவியம் : காந்தி அய்யா

வெளியில் வந்த சுகதேவன் சீடன் கோவிந்தனையும், தன் மகள் சுகன்யாவையும் காண்கிறான்.
















இளவரசர் சூர்யாவைக் கண்டதும், சுகன்யா வெட்கம் அடைகிறாள்.
சுகன்யா! நமது மதிப்பிற்குரிய விருந்தாளிக்கு உண்பதற்கு பழங்கள் எடுத்து வா!
ஆகட்டும் அப்பா!

சுகன்யா பத்திரமாகத் திரும்பியதைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால், ஜபர்சிங் பலத்த காயமுற்றிருப்பது தெரியுமா தலைவரே!
அது எப்படி ஏற்பட்டது என்று சுகன்யா சொன்னாள்.


சுகன்யா தப்பித்து வந்ததன் பின் விளைவுகள் எப்படியிருக்கும் என்பதைப் பற்றி இருவரும் உரையாடுகின்றனர்.
நீங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்!
வீரசிம்மன் அடுத்து என்ன செய்வானோ என்று அஞ்சுகிறேன்!


உங்களையும், சுகன்யாவையும் அவன் சும்மா விட மாட்டான்!
ஆமாம் இளவரசே! அவன் மீண்டும் எங்கள் மீது தாக்குதல் நடத்த முயற்சிக்கலாம்.


நீங்கள் பத்திரமாக இருக்க வேண்டும் என்பது என் ஆசை.
நான் இந்த இடத்தைச் சுற்றி பலத்த காவல் போடப் போகிறேன்! எனது காவல் அதிகாரி...
சுகன்யாவின் வருகையால் அவர்கள் பேச்சு தடைப் படுகிறது.
அப்பா! இளவரசருக்கு பழங்களும், குடிப்பதற்கும் எடுத்து வந்து இருக்கிறேன்.
நீயே அவரிடம் கொடு, சுகன்யா!


சூர்யா சுகதேவனிடமிருந்து விடை பெறுகிறான்.
சூர்யா! நீயும் கொஞ்சம் பாதுகாப்பாக இரு!
குருவிடம் கலந்து ஆலோசித்த பிறகு, திட்டத்தைப் பற்றி உங்களிடம் பேசுகிறேன்.


சாந்திரபுரத்தில் வீரசிம்மன் எரிமலை போல் சீறுகிறான்.
ஒரு குரங்கிடம் அடி வாங்க உனக்கு வெட்கமாயில்லை?
குரங்கு பின்னாலிருந்து என்னைத் தாக்கி விட்டது ராஜா! அந்த சமயம் சுகன்யா தப்பித்து ஓடி விட்டாள்.
என் முகத்தில் விழிக்காதே, கேடு கெட்டவனே!


அப்போது திடீரென ஒரு கிளி பறந்து வந்து ஒரு துணிச்சுருளைப் போடுகிறது.
இன்னுமொரு செய்தியா?
அதை எடு!


ஒரு வீரன் அதையெடுத்து ஜய்சிங்கிடம் தருகிறான்.


என்ன எழுதியிருக்கிறது அதில்?
வீரசிம்மா! சுகன்யாவிடம் இருந்து விலகி இரு. இது என் ஆணை. இளவரசன் சூர்யா.


தன்னைத்தானே இளவரசன் என்று சொல்லிக் கொள்ளும் அவன் யார்?
இளவரசன் சூர்யா! யார் அது?
எந்த நாட்டு இளவரசன் அவன்?


நாம் விரட்டியடித்த புரட்சிக்காரர்களின் தலைவனாக இருப்பான். அவனை அவர்கள் இளவரசன் என்று அழைக்கலாம்.
எனக்கு ஆணையிட அவனுக்கு என்ன தைரியம்?


புரட்சிக்காரர்கள் அமிருதபுரியில் உள்ளனர். அண்டை நாட்டின் மீது தாக்குதல் செய்ய வேண்டும்.
சரியாகச் சொன்னாய்! படைகளைத் தயார் செய்!
புரட்சிக்காரர்களின் தலைவன் வசந்தன் ஜெயானந்த முனிவரை சந்திக்கிறான்.
வணக்கம் குருதேவரே! சூர்யா எங்கே?
நீடூழி வாழ்வாயாக! சூர்யா இப்பொழுது வந்து விடுவான்.
கனகதுர்காவின் புது கோயிலில் ஒரு தங்க விக்கிரகம் உள்ளது. அதன் பாதுகாப்புப் பணியில் சூர்யா மும்முரமாக இருக்கிறான்.
வசந்தன் சூர்யாவுக்கு வணக்கம் தெரிவிக்கிறான்
வசந்தா! எங்கே உன்னை பல நாள்களாகக் காணவில்லை?
கனகதுர்கா கோயில் பற்றி முனிவர் சொல்லிக் கொண்டிருந்தார்.
இனி நீ சூர்யாவிடம் உதவி பெற்றுக் கொள்ளலாம்.
குருதேவரே! சூர்யா தலைவனாகும் நாளை எதிர் நோக்கி உள்ளோம்.
வசந்தா, சூர்யாவிற்கு தேவி கனகதுர்கையின் ஆசீர்வாதம் கிடைத்திருக்கிறது.
நாங்கள் சூர்யாவின் கட்டளைக்காகக் காத்திருக்கிறோம்.
ஜெயானந்தர் சிறிது நேரம் மௌனமாக இருக்கிறார்.
வீரசிம்மன் சும்மாயிருக்க மாட்டான். அமிருத புரியின் மீது படையெடுக்க திட்டம் தீட்டியிருப்பான்.
மக்கள் படை அமிருதபுரியை பாதுகாக்கும்.
விரைவிலேயே வீரசிம்மன் தோல்வியைத் தழுவுவான்.
தகுந்த சமயத்தில் சூர்யா உங்களுடன் சேர்ந்து தலைமை ஏற்பான்.
தொடரும்



# கோள மாளிகை

**ப**ம்பாயிலிருந்து முன்னூறு மைல் தொலைவில் இருக்கும் பீஜாப்பூர் பதினாறாவது நூற்றாண்டில் முஸ்லிம் மன்னர்களின் தலைநகராக இருந்தது. பீஜாப்பூரை சுதந்திர நாடாகச் செய்தவன் யூசுப் ஆதில்ஷா என்னும் சுல்தான். பீஜாப்பூரிலுள்ள கட்டடங்களில் மிகப் பெயர் பெற்றது கோள மாளிகை ஆகும். இது சுல்தான் முகம்மது ஆதில்ஷாவின் சமாதி. இது கி.பி.1626இல் கட்ட ஆரம்பிக்கப் பட்டு முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு கி.பி.1656இல் முடிவுற்றது.

இது அறுநூறு அடிச்சதுரமான மேடை மீது கட்டப்பட்டதாகும். இம்மேடையின் நான்கு மூலைகளில் நான்கு உயர்ந்த ஸ்தூபி போன்ற கட்டடங்கள் உள்ளன. அவை ஒவ்வொன்றும் ஏழு அடுக்குகள் கொண்டவையாகும். இதனுள் பரந்த சதுரமான ஹால் உள்ளது. இது 135 அடி உயரமுள்ளது. அந்த ஹாலை ஒரு பெரிய கோளம் (டோம்) மூடியுள்ளது. உலகில் வேறு எங்கும் இவ்வளவு பெரிய கோளம் இல்லை. இதன் குறுக்களவு 124 அடிகளாகும். இது ஹாலின் அடித்தளத்திலிருந்து 178 அடி உயரத்தில் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. வெளிப்புறத்திலிருந்து பார்த்தால் கட்டடம் அடித்தளத்திலிருந்து 198 அடி உயரத்தில் அமைந்துள்ளது தெரியும்.



FOR SUBSCRIPTION DETAILS PLEASE SEE PAGE 6

## உங்கள் விஞ்ஞானம்

### மரத்தின் வயது



ஒரு மரத்தின் அடிப்பாகத்தை அறுத்தால், அதன் பரப்பில் ஒன்றுக்குள் ஒன்றாகப் பல வளையங்களைக் காணலாம். இந்த வளை யங்களைக் கொண்டு அந்த மரத்தின் வயது என்ன, அது எத்தகைய மாறுபட்ட தட்ப வெப்ப நிலைகளை சந்தித்திருக்கிறது போன்ற பல அரிய விவரங்களை அறியலாம். இவ்வாறு வளையங்களைக் கொண்டு மரத்தை ஆராய்ச்சி செய்வதற்கு ஆங்கிலத்தில் டென்ட்ரோகுரோனாலஜி என்று பெயர். இதற்கு ஒரு மரத்தை அறுக்க வேண்டிய அவசியமில்லை. மரத்தின் அடிப்பாகத்தில் ஒரு துளையிட்டு, ஒரு விஞ்ஞானக் கருவியை உள்ளே புகுத்தினால் போதுமானது. அந்தக் கருவி மரத்தின் குறுக்குப் பரப்பில் உள்ள வளையங்களைப் பற்றிய தகவல்களை நமக்கு அறிவித்து விடும்.

## உங்கள் சுற்றுப்புறம்

### நீண்டநேரம் நீரில் திளைந்தால்....

நாம் நீண்ட நேரம் ஆற்றில் அல்லது குளத்தில் கு ளித்தால், ந ம் ை க விரல்களில் சுருக்கங்கள் விழுவதைக் கவனித்திருக்கலாம். சில சமயம் கால் விரல்களில் கூட அவ்வாறு நேரலாம். இது எதனால் உண்டாகிறது என்று தெரியுமா? நமது தோலில் இயற்கையாகவே 'சீபம்' என்ற ஒரு எண்ணெய் பசை உள்ளது. நீண்ட நேரம் நீராடினால், இந்த எண்ணெய் பசை தோலிலிருந்து அகன்று விடும். அப்போது ஆற்று நீர் தோலிலுள்ள துவாரங்கள் வழியாக நமது உடலுக்குள் சென்று வி டுகின்றது. இ வ்வாறு உட்புகுந்த நீர் ஒரே சீராக உடலில் தங்குவதில்லை. கை விரல்களில் சில பாகங்களில் அதிகமாகத் தண்ணீர் சேர சில பாகங்களில் குறைவாக இருக்கும். அதனால் நம் கை விரல்கள் பலவித சுருக்கங்களுடன் காணப்படும். இது இயற்கையே! நீரிலிருந்து வெளி வந்த சில மணி நேரங்களில் இது சரியாகி விடும்.



## உங்களுக்குத் தெரியுமா?

# விமானத்தின் கறுப்புப் பெட்டி



ஒரு விமானம் விபத்துக் குள்ளானால், அதன் காரணத்தை ஆராயும் நிபுணர்கள் விமானத்தில் உள்ள கருப்புப் பெட்டியைத்தான் முதலில் தேடுகிறார்கள். பிளாக் பாக்ஸில் அப்படி என்ன தான் உள்ளது தெரியுமா?

விமானத்தில் இரண்டு கருப்புப் பெட்டிகள் உண்டு. ஒரு கருப்புப் பெட்டி விமானத்தின் வேகம், அது செல்லும் திசை, அதன் உயரம் போன்ற பல விவரங்களை சேகரித்து வைத்திருக்கும். மற்றொன்றில் ஒரு ஒலி நாடா அல்லது டேப் ரிகார்டர் இருக்கும். இவை விமானியின் அறையில் வைக்கப்பட்டிருக்கும். விமானம் பறக்கத் தொடங்கியது முதல் விபத்துக்கு உள்ளான நேரம் வரை விமானிகள் ஆற்றும் முழு உரையாடலையும் ஒலி நாடா பதிவு செய்து வைத்திருக்கும். 30-45 நிமிடங்கள் வரை பதிவு செய்யலாம் விபத்து நடந்த இடத்தில் இவற்றை எளிதாகக் கண்டு பிடிப்பதற்காக பெட்டிகளுக்கு மஞ்சள் அல்லது ஆரஞ்சு வண்ணம் பூசப்பட்டிருக்கும்.

## நம் இந்தியா

# கலவைப் புதிர்

1. மகாராஜா ஜெய சிங் அவர்களால் ஜந்தர் மந்தர் எனப்படும் விண்ணியல் கடிகாரங்கள் நான்கு மாநிலங்களில் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. அந்த மாநிலங்கள் எவை?





2. இந்தியாவில் எந்த மாநிலத்தில் தங்கம் அதிகமாக உற்பத்தி செய்யப்படுகிறது?

3. இந்தியாவில் ஒரேயொரு இடத்தில் எரிமலைகள் உள்ளன. அந்த இடம் எது?





4. ஒரு மாநிலத்தின் பெயர் 'புதுவீடு' என்ற பொருள்படும் படி அமைந்துள்ளது. அது எது?

(விடைகள் 70ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



MAHANTESH C. MORABAD



NARAYANAMURTHY TATA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவுஆகஸ்ட் 2005இதழில் வெளியிடப்படும். போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

வாழ்த்துகள்!

பரிசு பெற்றவை

**ஏப்ரல் 2005 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

*மு. வடிவுக்கரசி*
*பாரதி இல்லம்,*
*78, மேல ரத வீதி,*
*பணகுடி - 627 109.*





"படிப்போ வாழ்வுக்குத் துணை;
ஒப்பனையோ நடிப்புக்குத் துணை"

## நம் இந்தியா - விடைகள் (பக்கம் 69)

1. ராஜஸ்தான், உத்திரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், தில்லி,
2. கர்நாடகா-கோலார் தங்கச்சுரங்கம்,
3. அந்தமான், நிகோபார்,
4. சிக்கிம்.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor: B. Viswanatha Reddi (Viswam)

# சுற்றுச்சூழலைக் காப்போம்!



வாரவிடுமுறை நாள்களில் ஒருமுறை வீணா தனது மாமா வீட்டுக்குச் சென்றிருந்தாள். அங்கு தங்கியிருந்தபோது, மாமாவின் பிள்ளை பிரகாஷ் அவரிடம், ''அப்பா! நாளைக்கு எங்கள் பள்ளியில் நடக்கவிருக்கும் விளையாட்டு நிகழ்ச்சிகளைப் பார்க்க உங்களால் வரமுடியுமா?'' என்று கேட்டான். ''இல்லை பிரகாஷ்! என்னால் வரமுடியாது. உலகச் சுற்றுச்சூழல் பாதுகாப்பு தினத்தையொட்டி நடக்கவிருக்கும் நிகழ்ச்சிகளுக்காக நான் நகரத்திலுள்ள சில முக்கியப் பிரமுகர்களை நாளைக்கு சந்திக்கப் போகிறேன்'' என்றார் வீணாவின் மாமா.

''அந்த நிகழ்ச்சி என்று நடைபெறப் போகிறது?'' என்று வீணா கேட்டாள். அதற்கு வீணாவின் மாமா, ''ஜுன் மாதம் 5ந் தேதி நடைபெறும்! மக்களிடையே சுற்றுச்சூழல் பாதுகாப்பை வலியுறுத்த ஊர்வலங்களும், மரம் நடும் விழாக்களும் நடைபெறும். அதிருக்கட்டும்! அதற்காக நீ என்ன செய்யப்போகிறாய்?'' என்றார்.

''நான் பள்ளியில் படிக்கும் சிறுமி. என்னால் என்ன செய்ய முடியும்?'' என்று வீணா கேட்டாள்.

அதற்கு அவர், ''எவ்வளவோ செய்யலாம்! மக்காத பொருட்களான பாலிதீன் பைகள், பாட்டில்கள் ஆகியவற்றை பயன்படுத்துவதை நிறுத்து. ஏனெனில் இவை சுற்றுச்சூழலை மாசுபடுத்துவதில் பெரும் அங்கம் வகிக்கின்றன. தேவையின்றி அதிகமாகக் காகிதங்களை வீணாக்காதே! காட்டிலுள்ள மரங்கள் அழிவதற்கு இது ஒரு காரணம். முக்கியமான நிகழ்ச்சிகளில் எல்லாம், மரக்கன்றுகள் நட்டுக் கொண்டாடு. நீங்கள் எதிர்கால சந்ததியினர். உங்கள் கைகளில்தான் எதிர்காலம் உள்ளது. நீங்கள் இப்போதிலிருந்தே முறையாக செயற்பட்டு, ஒரு பசுமையான உலகத்தை உங்களுடைய சந்ததியினருக்கு விட்டுச் செல்ல முடியும்!'' என்றார்.

''ஆகட்டும் மாமா! அப்படியே செய்கிறேன்!'' எனறு வீணா உறுதி கூறினாள்.

